KALKI
0.2006 ரூ.8.00
0 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...



## குரு பெயர்ச்சிப் பலன்கள்

ஆரம்பம்...



## தேவமருந்து

பகுதி 2



## வேலைவாய்ப்புத் தொடர்...



# ஆர்யா இன்னொரு சூர்யா!

• கே.எஸ்.மகாதேவன்



# வலிக்காத விமர்சனங்கள்!

"டெல்லியில் நான் வசித்தபோது கே.எஸ்.மகாதேவன் அங்கே தமது அலுவலக வேலைக்காக வருவார். அப்போதெல்லாம் கே.எஸ்.எம். பம்பாய்வாசி. தலைநகர அலுவலகப் பணிகள் முடிந்து மாலை நேரங்களில் எங்கள் வீட்டுக்கு வந்துவிடுவார். நான் சாதகம் செய்வதைக் கேட்டுக் கொண்டிருப்பார். பல சமயங்களில் அவரே பாடியும் வழி காட்டியதுண்டு. கோனேரிராஜபுரம் வைத்தியநாத அய்யர் போன்ற பழைய நாளைய வித்வான்கள் ஒரு ராகத்தை எப்படி ஆலாபனை பண்ணுவார்கள், என்னென்ன சஞ்சாரங்கள் அதில் வரும் என்பதையெல்லாம், தமது குரலின் ஒத்துழையாமையைப் பொருட்படுத்தாமல் பாடிக் காட்டி விடுவார்! சில பிடிகளைப் பாட வேண்டாம் என்று கூட அறிவுரை சொன்னதுண்டு. அந்த அறிவுரைகள் எங்களுக்கு ரொம்பவும் உபயோகமாக இருந்தன."

- விமர்சகர் கே.எஸ்.மகாதேவன் குறித்து, வித்வான் டி.ஆர். சுப்ரமண்யம், பகிர்ந்து கொண்ட சுவையான பழைய நினைவுகள் இவை. அண்மையில் காலமான கே.எஸ்.மகாதேவனுக்கு, சென்னை ராககதா அரங்கில் கடந்த அக்டோபர் 6 அன்று அஞ்சலிக் கூட்டம் நடந்தது. 'சுருதி' ஆசிரியர் கே.வி.ராமநாதன், இசைக் கலைஞர் வேதவல்லி, 'ஹம்சத்வனி' சபா செயலாளர் ராமச்சந்திரன், விமர்சகர் ஜி.சுவாமிநாதன் என்று பலர் கே.எஸ்.எம். குறித்துப் பேசினார்கள். இடையிடையே கூட்டத்துக்கு வந்திருந்த அன்பர்களும் அஞ்சலி செலுத்தினார்கள். அவர்களுள் ஒருவரான வித்வான் பி.எஸ்.நாராயணசாமி ஒரு சம்பவத்தை நினைவு கூர்ந்தார் :

ஒரு முறை பி.எஸ்.என்னுடைய கச்சேரியை விமர்சித்த மகாதேவன், அவர்

**அஞ்சலி**

இசை - நடன விமர்சகரும் இசை நுணுக்கங்களை ஆய்வதில் வல்லவருமான டி.எஸ். பார்த்தசாரதி அண்மையில் காலமானார்.

தியாகராஜ கீர்த்தனைகளை தமிழில் தொகுத்து அர்த்தத்துடன் நூலாக வெளியிட்டது டி.எஸ்.பி. செய்த மிகப் பெரிய பணி.

இசை நூல்கள் விற்கும் கடைக்குச் சென்று "டி.எஸ்.பி.யோட தியாகராஜ கிருதி புத்தகம் இருக்கா?" என்று விசாரிக்கும்



கரஹரப்ரியாவை நன்கு ஆலாபனை செய்தாலும் குரு (செம்மங்குடி) பாடுவது மாதிரி அது இல்லை என்று எழுதினாராம்! சற்றே வருத்தமடைந்த பி.எஸ்.என். இது குறித்து உரிமையுடன் மகாதேவனிடம் விவாதித்திருக்கிறார்.

“உன் குருவைப் போலவே நீ எதற்குப் பாட வேண்டும்? அவர் பாணியின் அடிப்படைகளை மட்டும் மாற்றாமல் உன் தனித்தன்மை வெளிப்படும்படியல்லவா நீ பாடினாய். அதைத்தான் ஆங்கிலத்தில் குறிப்பிட்டேன்” என்றாராம் மகாதேவன்!

யார் மனமும் புண்படாமல் விமர்சித்து வந்தவர் கே.எஸ்.மகாதேவன் என்பது இரங்கல் கூட்டத்தின் ஏகோபித்த கருத்தாக வெளிப்பட்டது. மும்பையில் வசித்த காலத்தில் தமது சின்னஞ் சிறு குடியிருப்பில் அத்தனை பெரிய வித்வான்களுக்கும் விருந்தோம்பி மகிழ்ந்திருக்கின்றனர் மகாதேவன் - நாராயணி அம்மாள் தம்பதி. அக்காலகட்டத்தில் மும்பை சண்முகானந்தா சபா சிறிய ஆரம்பத்திலிருந்து பெரியதாக வளர்ச்சியுற அதன் நிர்வாக உறுப்பினராக இருந்து நிறைய உழைத்தார் மகாதேவன். அவர் சென்னையில் குடியேறிய பிறகு பாலக்காடு மணி அய்யர் அவரிடம் சொன்னாராம் : “நீர் இங்கு வந்த பிறகு சண்முகாநந்தாவில் தாராளமாகச் சன்மானம் தருகிறார்கள்” என்று! இதைக் கேட்டுச் சிரித்து மகிழ்ந்தாராம் நகைச்சுவை உணர்வு மிக்க கே.எஸ்.மகாதேவன்!

- ரஸிகா

அளவுக்கு பார்த்தசாரதியின் பெயர் தியாகபிரும்மத்துடன் இணைந்து விட்டது!

இசையுலகம், குறிப்பாக கலைஞர்கள், பல சந்தேகங்கள் கேட்டறிவதற்காக அணுகிய ஓர் அதிசய அகராதி மறைந்து விட்டது!



* டி.எஸ்.பார்த்தசாரதி


**கல்கி**

ஒவ்வொரு இதழும் உங்கள் பேழைக்கு

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

உதவி ஆசிரியர் :
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்
ச. கார்த்திகேயன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யுஎஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

"'கலாபக் காதலன்' பார்க்க சத்யம் தியேட்டருக்குப் போயிருந்தேன். படம் பார்க்க காலேஜ் பெண்கள் மட்டுமின்றி கணவன்-மனைவி ஜோடிகளும் ஏராளமாக வந்திருந்தனர்.



• சரண்

ஆர்யாவுக்கு அத்தனை ரசிகர்கள்! 'அறிந்தும் அறியாமலும்' படத்தில் ஆர்யாவைப் பார்த்தபோது, அவரிடம் ஒரு துடிப்பு இருப்பது தெரிந்தது. மாதவன், சூர்யா வரிசையில் இடம்பெற்றிருப்பவர் ஆர்யா!" என்கிறார் 'வட்டாரம்' படத்தின் இயக்குனர் சரண்.

"ஆர்யாவைக் கண்டுபிடித்தவர் ஜீவா; அவரை நடிக்க வைத்தவர் விஷ்ணுவர்த்தன். அவரை ஒரு முழுமையான ஹீரோவாய் 'வட்டார'த்தில் நான் காட்டியிருக்கிறேன்! இந்தப் படம் மலேசியாவில் சென்சாரானது தனிக் கதை. அங்கு கடுமையான சென்சார் விதிமுறைகள்."

அப்படிப்பட்ட, மலேசிய சென்சார் போர்டு உறுப்பினர்களே வெட்டு எதுவும் தராமல், நல்ல படம் என்று கூறியதுடன், படம் முடிந்தவுடன், எழுந்து நின்று கைத்தட்டிப் பாராட்டினார்களாம். இதைச் சொல்கிறபோது சரணின் முகத்தில் பெருமிதம்.

"படம் ஆரம்பித்தபோது, ஆர்யாவுடன் பிரச்னை வந்தாலும், நடிகர் சங்கமும், தயாரிப்பாளர் சங்கமும் உட்கார்ந்து பேசி, சுமுகமாய்த் தீர்த்து வைத்தார்கள். எனக்கும், ஆர்யாவுக்கும் இடையில் நல்ல புரிதல் இருந்ததால், நல்ல ஒத்துழைப்பு கொடுத்தார்.

முதல்கட்ட படப்பிடிப்பு ஆரம்பிக்க எல்லா ஏற்பாடுகளும் செய்தாகிவிட்டது. ஆனால் ஹீரோயின் முடிவாகவில்லை!

தெலுங்கு நடிகை காம்னாவை அறிமுகப்படுத்த முடிவு செய்திருந்தேன். அவரும் சம்மதம் சொல்லியிருந்தார். ஆனால் தேதி ஒத்துவரவில்லை. அப்புறம் அமோகா, ரியா சென், தீபிகா படுகோன் என்று முயற்சி செய்தும் பிரயோஜனமில்லை" என்று சொல்லி, சஸ்பென்ஸ் வைத்த சரணிடம், அப்புறம் 'ரேத்'தை எங்கே கண்டுபிடித்தீர்கள்? என்றோம்.

"வீட்டிலிருந்து என் ஆபீசுக்கு வந்து கொண்டிருந்தபோது, வழியில் ஒரு நகரப் பேருந்தின் பின்புறம் வைக்கப்பட்டிருந்த குமரன் ஸ்டோர்ஸ் விளம்பரத்தில் இடம் பெற்றிருந்த பெண், என் கவனத்தை ஈர்த்தார். டெல்லியில் இருந்த அந்த மாடலை, மறுநாள் காலையில் சென்னைக்கு வரவழைத்து, மேக்-அப் டெஸ்ட் எடுத்தோம். முதலில் நேரில்

# ஆர்யா இன்னொரு

பார்த்தபோது எனக்கு முழு திருப்தி இல்லை. மேக்-அப் மேன் சுந்தரமூர்த்தி, அவருக்கு மேக்-அப் போட்டு, கேமராமுன் கொண்டு வந்து நிறுத்தியபோது, 'கிரத்' நான் உருவாக்கியிருக்கும் கேரக்டருக்குப் பொருத்தமாக இருந்தார். அடுத்த நாளே ஷூட்டிங்!" என்கிறார் சரண்.

**"வ**ட்டாரம் டைட்டில் இரண்டு வருடங்களுக்கு முன் எனக்குத் தோன்றிய ஒன்று. ஒருவன் தன்னுடைய குறுகிய வட்டாரத்திலிருந்து இன்னொரு வட்டாரத்தில் அடியெடுத்து வைத்து, தன்னை நிலைநிறுத்திக் கொள்ளுவதுதான் கதை!"

'பெயரைக் கேட்டால், வழக்கமான பழிவாங்கும் கதை போன்ற வாசனை அடிக்கிறதே?'

"இது பழிவாங்கும் கதைதான் என்றாலும், வழக்கமானது இல்லை. நான் படத்தில் துப்பாக்கியைப் பயன்படுத்தியிருக்கிறேன். அவசியமான தருணங்களில் மட்டுமே அது வெடிக்கும். நான் இதுவரை பதினொரு ஹீரோயின்களை அறிமுகப்படுத்தியிருக்கிறேன். ஆனால் ஹீரோக்களை அறிமுகப்படுத்தவில்லை. இருக்கிற ஹீரோக்களில் தேர்தெடுத்து படத்தில், நடிக்க வைத்திருக்கிறேன். 'ஜெமினி'யில் விக்ரம், 'ஜேஜே.'வில் மாதவன், இப்போது ஆர்யா!

"பழகும் விதம், திறமை, ரசிகர்களின் ஈர்ப்பு என்று எப்படிப் பார்த்தாலும், ஆர்யா இன்னொரு சூர்யா! அதனால்தான், சூர்யா படத்தைப் போல, 'ரிச்' ஆக இந்த ஆர்யாவை வைத்துப் படம் தயாரித்திருக்கிறேன்" என்கிறார் சரண்.

**- எஸ். சந்திரமௌலி**



'உள்ளாட்சித் தேர்தல்' என்று நாம் தொடங்கும்போதே, சுறுசுறுவென்று கம்பி மத்தாப்பாய்ப் படபடக்கிறார் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலச் செயலாளர் தா.பாண்டியன். அவருடனான சந்திப்பிலிருந்து...

## உள்ளாட்சித் தேர்தல் கிடுகிடு...

# "நற்பெயரைக் கெடுத்துக்கொண்டார் கலைஞர்!"

**— தா.பாண்டியன்**



**தி.மு.கவின் கூட்டணிக் கட்சியான நீங்கள், உள்ளாட்சித் தேர்தலில் சில இடங்களில் தி.மு.க.வை எதிர்த்தே போட்டியிட வேண்டிய நிலை ஏன் வந்தது?**

"நகராட்சி, பேரூராட்சி, ஊராட்சி ஒன்றியங்கள், மாவட்டப் பஞ்சாயத்து ஆகியவற்றின் தலைவர் பதவிகளைப் பகிர்ந்துகொள்வது குறித்துத்தான் மேல்மட்டத் தலைவர்கள் கூட்டத்தில் முடிவெடுக்கப்பட்டது. வார்டு அளவில் தொகுதிப் பங்கீடு செய்யும் சாத்தியம் இல்லை. ஏனென்றால் கிட்டத்தட்ட ஒன்றேகால் லட்சம் பதவிகள். உள்ளூர்ச் சூழலைப் பொறுத்து முடிவெடுக்க வேண்டிய நிலை! எனவே, அதில் மட்டும் மாவட்ட அளவில் கூட்டணிக் கட்சிப் பிரமுகர்கள் பேசி முடிவெடுக்க வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. ஆனால் மாநில அளவில் தி.மு.க. தலைமையில் காண்பிக்கப்பட்ட உணர்வு, மாவட்ட அளவில் பிரதிபலிக்கவில்லை. தென் சென்னை தி.மு.க. செயலாளர் எங்களை மதிக்கவேயில்லை; பேச்சுவார்த்தையும் நடத்தவில்லை. பல இடங்களில் இதுபோன்ற முரண்பாடுகள் ஏற்பட்டதால்தான் நாங்கள் - இடதுசாரி இயக்கங்கள் - தி.மு.க.வை எதிர்த்துப் போட்டியிட்டோம்."

**இந்த முரண்பாடுகளைத் தி.மு.க. தலைமையின் கவனத்துக்குக் கொண்டு சென்றீர்களா?**

"கொண்டு சென்றோம். ஆனால் அவர்களால் அனைத்தையும் தீர்க்க முடியவில்லை. இதற்குப் பல காரணங்கள். தேவையான கால அவகாசம் இல்லை. ஒவ்வொரு கட்சியும் உள்ளூரில் தங்களைப் பலப்படுத்திக் கொள்ள இத்தேர்தல் ஒரு வாய்ப்பு என்பதால், விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை குறைவு. மூன்றாவதாக 'எங்களிடம்தான் மக்கள் பலம் உள்ளது' என்ற போக்கில் செயல்படும் பெரியண்ணன் மனப்பான்மை."



**தேர்தல் பிரசாரத்தின்போது அரசுக்கும் போலீஸுக்கும் எச்சரிக்கை விடுத்தீர்களே!**

"சென்னையில் சரியான உடன்படிக்கை ஏற்படாததால் 'நாங்களும் இருக்கிறோம்' என்பதைக் காட்டுவதற்கு அடையாளமாக வடசென்னை மற்றும் தென்சென்னையில் இரண்டு வார்டுகளில் போட்டியிட்டோம். தென்சென்னை 140-ஆவது வட்டத்தில் போட்டியிட்ட எங்கள் வேட்பாளருக்கு மிரட்டல் வந்தது. இதைத்தவிர முறைகேடுகள் நடக்கப் போவதாகத் தகவல் வந்தது. எனவேதான் அரசையும், போலீஸையும் உஷார்படுத்தும் விதமாகப் பேசினேன். ஆனால் தேர்தல் அன்று நாங்கள் எதிர்பார்த்தபடியே நடந்தது. எங்கள் வேட்பாளர் கைது செய்யப்பட்டார். அராஜகத்தைக் கட்டவிழ்த்துவிட்டது ஆளும்கட்சி. உயர் போலீஸ் அதிகாரிகளிடம் புகார் கொடுத்தோம். 'எங்கள் கைகள் கட்டப்பட்டிருக்கின்றன' என்றார்கள் அவர்கள். மொத்தத்தில், கிரிமினல்கள் நடத்தி முடித்த தேர்தல் இது."

**இதுபோன்ற செயல்களில் தி.மு.க. ஏன் ஈடுபட்டது என்று நினைக்கிறீர்கள்?**

"அதுதான் எனக்கும் புரியவில்லை. சட்டமன்றத் தேர்தலின்போது கொடுத்த பல வாக்குறுதிகளை நிறைவேற்றி, மக்களிடம் நற்பெயர் பெற்றிருந்தார் கலைஞர். நான்கு மாதங்களில் பெற்ற நற்பெயர், அந்த ஏழு நாள் நிகழ்ச்சிகளின் மூலம் வெகுவாகப் பாதிக்கப்பட்டுவிட்டது."

**'இதைவிட அதிகமான வன்முறை 2001-ல் ஜெயலலிதா ஆட்சியின்போது நடந்தது' என்று தி.மு.க. சொல்கிறதே?**

"2001-ல் நடந்ததைப் பற்றி இப்போது பேசி என்ன பயன்? ஒரு தவறை இன்னொரு தவறோடு ஒப்பிட்டுப் பேசுவது மோசமான செயல்."

**இந்த உரசல்கள் தி.மு.க. கூட்டணிக் கட்சிகளிடையே பிளவை ஏற்படுத்துமா?**

"இந்த ஒன்றை வைத்துப் பிளவு ஏற்படாது; ஆனால் விமர்சனங்கள் வரும்."

**உள்ளாட்சித் தேர்தல் விவகாரத்தில் ஜெயலலிதாவுடன் இணைந்து போராடுவீர்களா?**

"எதற்காக அவருடன் இணைந்து போராட வேண்டும்? எங்கள் கூட்டணித் தலைவர் கலைஞர், எங்கள் கவலையைப் புரிந்துகொண்டிருக்கிறார்."

**அடுத்து, 2009-ல் வரப்போகும் பாராளுமன்றத் தேர்தல் வரை உங்கள் கூட்டணி கட்டுக்கோப்பாக இருக்குமா?**

"இப்போது தமிழகத்தில் இருப்பது தேர்தல் கூட்டணிதான்; நிரந்தர அரசியல் கூட்டணி அல்ல. மத்தியில் உள்ள கூட்டணியைப் போன்றதும் அல்ல இது. இங்கு ஒருங்கிணைப்புக் குழு கிடையாது; குறைந்தபட்ச பொதுத் திட்டம் கிடையாது; ஆட்சி அதிகாரத்தில் பங்கும் கிடையாது. 'கூட்டணி ஆட்சியை தமிழ்நாட்டு மக்கள் ஏற்கமாட்டார்கள்; தனிக்கட்சி ஆட்சியே தமிழ்நாட்டுக்குப் பொருந்தும்' என்று நினைத்துச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார் கலைஞர். அரசு செய்யும் நல்ல காரியங்களுக்குத் தொடர்ந்து ஆதரவு தெரிவிப்போம்; அதேவேளையில் மக்கள் பிரச்னைகளுக்காக நாங்கள் போராடவும் தயங்க மாட்டோம்."

**- ப்ரியன்**

படம்: **ராஜன்**



## தேவ மருந்து – 2




# சிக்குன் குன்யா

அன்பார்ந்த வாசகர்களே,

தேவமருந்தின் மூலம் உங்களை மீண்டும் சந்திப்பதில் பெருமகிழ்ச்சியடைகிறேன்.

இன்றைய சூழ்நிலையில் நோயில்லாத ஆரோக்கியமான மனிதனைக் காண்பது அபூர்வமாகிவிட்டது. ஒவ்வொரு மனிதனும் உடலாலோ, மனத்தாலோ, சுற்றுச் சூழலாலோ பாதிக்கப்படுகிறான். ஆதலால்தான் சரகர், நோய் என்பதைத் துக்கம் என்று குறிப்பிடுகிறார். உடலாலோ, மனத்தாலோ ஒரு சுகத்தை நாம் அனுபவிக்காத நிலைக்கு, துக்கம் என்று பெயர். துக்கம் என்று சொன்னால், அது உடல் - மனம் சார்ந்த வலியாகும். அந்த வலியிலிருந்து விடுபடுவதற்காகவே ரிஷிகள் ஆயுர்வேதத்தினைத் தொகுத்தளித்தார்கள். பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு ரிஷிகள் பலர் இமயமலை பர்வதத்தில் ஒன்றாகக் கூடி, நோயினால் அவதிப்படும் மனிதர்களின் நிலையைக் கண்டு கவலையுற்று, இந்நோயிலிருந்து அவர்களை மீட்கவும், மீண்டும் நோய் வராமல் காக்கவும் ஆயுர்வேத தத்துவத்தை இறைத் தூதர்களிடமிருந்து கற்றுணர்ந்தார்கள். இந்த விவரத்தை நாம் ஸம்ஹிதைகள் (வேத விவரணைகள்) மூலம் அறிகிறோம்.

ஆயுர்வேதம் என்ற சொல்லுக்கு வாழ்க்கையைப் பற்றிய மெய்யறிவு என்று பொருள். இந்த உலகம் ஆகாயம், வாயு, நெருப்பு, நீர், பூமி என்ற ஐந்து பூதங்களால் ஆனது. மனிதனும் ஐந்து பூதங்களாலேயே உருவாக்கப்பட்டிருக்கிறான். இந்த ஐந்து பூதங்களும் மனிதனுக்குள்ளே வாதம், பித்தம், கபம் என்ற செயல்பாட்டின் வழியாகத் தங்களை வெளிப்படுத்திக் கொள்கின்றன. பிரம்மா என்று சொல்லப்படுகின்ற உருவமற்ற தத்துவம் வாயுவாகவும், சிவம் எனப்படுகின்ற அக்னி தத்துவம் பித்தமாகவும் நாராயணன் என்று சொல்லப்படுகின்ற ஜல தத்துவம் கபமாகவும் உடலை இயக்கி வருகின்றன. இதையே க்ரியா சக்தி, இச்சா சக்தி, ஞான சக்தி என்று நாம் குறிப்பிடுகிறோம்.

ஒரு செல் என்று சொல்லக்கூடிய அணு அளவில்கூட இந்த வாத, பித்த, கபங்கள் காணப்படுகின்றன. இதை ஆயுர்வேதம் ஊன்றிக் கவனித்து சிகிச்சை முறைகளை வகுத்துள்ளது.

நாம் ஒரு வண்டியில் பயணம் செய்து கொண்டிருக்கிறோம் என்று வைத்துக் கொள்வோம். அந்த வண்டியின் ஆக்ஸிலரேட்டர் வாதமாகவும், க்ளட்ச் பித்தமாகவும், பிரேக் கபமாகவும் இயங்குகிறது. இந்த உலகத்தில் உள்ள எல்லா விஷயங்களும் வாத, பித்தக் கபங்களாகவே காணப்படுகின்றன. சிருஷ்டி (ஆக்கல்) என்று சொல்லக்கூடிய உருவாக்குதல்,



டாக்டர்.லி.மஹாதேவன்



# வலி தீர...

புதிய பகுதி

ப்ரளயம் (அழித்தல்) என்று சொல்லக் கூடிய அழிவு, ஸ்திதி (காத்தல்) என்று சொல்லக்கூடிய நிலைபெறுதல் போன்றவை முறையே வாத, பித்தக் கபத்தையே சார்ந்திருக்கின்றன.

மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று

என்பது குறள். வாத, பித்தக் கபங்கள் தன்னிலையிலிருந்து கூடினாலும், குறைந்தாலும் நோய் வரும் என்று இதற்கு பொருள். திருக்குறளுக்கு உரை எழுதிய பரிமேலழகர் ஆயுர்வேத மருத்துவர்கள் இவ்வாறு குறிப்பிடுவதாகக் கூறுகிறார்.



இந்த வாத பித்தக் கபங்கள் நமது தவறான உணவுப் பழக்கத்தினாலும், வாழ்க்கை முறையினாலும், சுற்றுச்சூழல் காரணமாகவும், மனக்காரணங்களினாலும், வெளிக் காரணங்களினாலும், க்ரஹங்களின் அமைப்புகளினாலும், கர்ம விளைவுகளினாலும் கெட்டுப்போய், தாதுக்களுடன் சம்பந்தப்பட்டு நோயை ஏற்படுத்துகின்றன.

எல்லா நோய்களுக்கும் எல்லா மருத்துவ முறைகளிலும் மருந்து உண்டு என்று கூற முடியாது. சில நோய்களுக்கு ஆயுர்வேதத்தில் நல்ல சிகிச்சையை அளிக்க முடியும். மற்ற மருத்துவ முறைகளிலும் நல்ல விஷயங்கள் இருக்கின்றன. ஆயுர்வேதத்தின் அடிப்படைத் தத்துவங்களாகிய மூல தத்துவத்தை நன்றாக அறிந்த ஒருவனுக்கு, நவீன மருத்துவ விழிப்புணர்வு ஏற்படும்பொழுது அவன் ஆயுர்வேதத்தைத் தவறில்லாமல் செய்கிறான் என்பது நாம் அனுபவபூர்வமாகக் கண்ட உண்மையாகும்.

## ஜ்வரம்! (ஜுரம்!)

ராமன். வயது நாற்பது. உடலில் உஷ்ணம், கனம், சோம்பல், உணவு பிடிக்கவில்லை, சோர்வு, கண்களில் நீர் தளும்பல், கால்களில் ஆடுசதைப் பகுதியில் வலி!

ஜுரம்தான்! (ஆயுர்வேதத்தில் 'ஜ்வரம்'). இருமல், சளி போன்றவை இல்லை ராமனுக்கு. வயிற்றுக் கோளாறோ, நாக்கில் வெண்மை படிந்த நிலையோ இல்லை. ஆகவே, பித்தம் அதிகரித்த நிலையையே உணர்த்தியது. ஆனால் பத்து நாட்களாகியும் விடாத ஜ்வரமாக இருந்ததால் இரத்தப் பரிசோதனை செய்து எக்ஸ்ரேயும் எடுக்கச் செய்தோம். அதிலும் பிரச்னை எதுவுமில்லை. 'வைரல் ஃபீவர்'தான் என்பது உறுதியாகிவிட்டது. கபத்தைப் பிரதானமாகக் கொண்ட விஷத்தன்மை உள்ள ஜ்வரம் என்பதால் கடுக்காய்,





கொத்துமல்லி போன்ற சில மருந்துப் பொருட்கள் சேர்ந்த பத்யா குஸ்தும்பராதி கஷாயத்தைக் கொடுத்தேன். கூடவே, திப்பில், ஜடாமாஞ்சில் போன்ற மருந்துப்பொருள்கள் அடங்கிய தூஷிவிஷாரி என்ற மாத்திரையும் கொடுத்தேன். ஐந்து நாட்களில் நிவாரணம் கிடைத்தது ராமனுக்கு.

மருந்துகள் தவிர, கொத்துமல்லியும் சுக்கும் கொதிக்க வைத்த தண்ணீர், உடல் வலிக்குக் கொள்ளு வறுத்துத் துணியில் கட்டி ஒத்தடம் என்று இந்த ஜ்வரத்துக்கு இதமான சிகிச்சைகளும் தரலாம்.

ஜ்வரம் விட்டு, பசி திரும்புகிற நேரத்தில் பிப்பல்யாதி கிருதம் என்கிற நெய்யை இரண்டு வேளை கொடுத்தால் மிகவும் நல்லது.

ஆயுர்வேதத்தில் எல்லாப் புத்தகங்களும் ஜ்வர சிகிச்சையைத்தான் முதலில் கூறுகின்றன. ருத்ரனுடைய கோபத்தினால் பிறந்த வீரபத்திரனால்தான் ஜ்வரம் ஏற்பட்டது என்று வேதங்கள் சொல்கின்றன.

வேதம் விதித்ததுதானே என்று ஜ்வரத்தை வைத்துக்கொண்டு சும்மா இருந்தால்கூட, ஜ்வரம் சும்மா விடாது நம்மை. அதிகமாக ஜ்வரம் அடித்தால் உடல் நடுக்கம் வந்துவிடும். இதை 'வேபது' என்று ஆயுர்வேதம் சொல்கிறது.

சில சமயம் இந்தக் குளிருக்கு மலேரியாக் காய்ச்சல் காரணமாக இருக்கலாம். பெண்களுக்குப் பெரும்பாலும் சிறுநீர் பழுப்பினால், குளிர்க் காய்ச்சல் வருகிறது. நெருஞ்சி முள் சேர்ந்த ப்ருஹத்யாதி கஷாயம், சிலாஜது சேர்ந்த சந்திரபிரபா மாத்திரை மற்றும் நில வேம்பு சேர்ந்த சுதர்ஸன வடி ஆகியவை இதற்கு மிக்க பலனளிக்கின்றன.

சிறுநீர் பழுப்பாகி ஜ்வரத்துடன் வந்த ஒரு பெண்ணுக்கு, ஒரு லிட்டர் தண்ணீரில் சாரணை வேரைக் காய்ச்சி வடிகட்டி, சிறிது மஞ்சள்பொடி சேர்த்துக் காய்ச்சிக் கொடுத்தேன். குடிநீருக்குப் பதில் இதைக் குடித்துவர, (சில மாத்திரைகளுடன்) நல்ல பலன் கிடைத்தது.

இன்று சிக் குன் குன்யா பெரும் தொல்லையாக நாட்டைப் பீடித்திருக்கிறது. இந்தக் கொசுக்கடி ஜ்வரம் விட்ட பிறகும் உடலில் தங்கும் மூட்டுவலிக்கு நல்லதொரு நிவாரணம் சொல்கிறேன்:

ராஸ்னா சுண்டியாதி கஷாயமும் பஞ்ச ஸம சூர்ணமும் இதற்கு நல்ல பலனைத் தருகின்றன. ஜ்வரம் விட்ட பிறகு, வலி உள்ள இடத்தில் கற்பூரத் தைலத்தைத் தடவி ஆவி பிடித்தால் நல்ல பலன் இருக்கும்.



(தொடரும்)



# வள்ளலார்

# உரைநடை நூல்

700 பக்கங்களுக்கு மேல் !

**விலை ரூ.175**

**சலுகை விலையில்**

**ரூ.100 மட்டுமே!**

**அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள்**
**இந்நூலிற்கு அளித்த முன்னுரையிலிருந்து...**

திருவருட்பிரகாச வள்ளலார், ஞானதான வள்ளல் மட்டும் அல்லர்; கவிஞர் மட்டும் அல்லர்; உயர்ந்த உரைநடை ஆசிரியரும் ஆவார்.

வள்ளலார் அருளிய திருஅருட்பா பாடல்களைப் பற்றி அனைவரும் அறிவர். ஆனால் அவர் எழுதி இருக்கும் உரைநடைகள் மிகப்பெரும்பாலோருக்குத் தெரியாது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் உரைநடைக்குச் சீரியதோர் எடுத்துக்காட்டாக வள்ளலாரின் உரைநடையைக் கூறலாம்.

இந்த உரைநடை நூல் மனுமுறைகண்ட வாசகம், ஜீவகாருண்ய ஒழுக்கம், உபதேசங்கள், விண்ணப்பங்கள், கடிதங்கள், அழைப்புகள், அறிவிப்புகள், கட்டளைகள், மருத்துவக் குறிப்புகள் என்று பல பகுதிகளாக இருக்கிறது.

ஜீவகாருண்ய ஒழுக்கம், சமரச சன்மார்க்க நெறி முதலிய ஒழுக்க வழிகளைப் பாமரரும் புரிந்து கொள்ளும் எளிய உரைநடையில் வள்ளலார் அமைத் துள்ளதை இந்நூலினைப் படிப்போர் உணரலாம்.

வள்ளலார் தமது உரைநடையில் பழமொழிகளையும் உவமைகளையும் நிறையக் கையாள்கிறார்.

ஒரு கருத்தை விளக்கவும், வலியுறுத்தவும், ஒரே சமயத்தில் தொடர்ச்சியாகப் பல உவமைகளை அடுக்கிக்கொண்டே போவார் வள்ளலார்.



வள்ளலார் தமது சீடர்களுக்கும், அன்பர்களுக்கும் எழுதிய கடிதங்களும் அவரது சிறந்த உரை நடைக்கு மேலும் சான்று பகர்கின்றன.

**திருவருட்பாவின் பாடல்களைப் புரிந்து கொள்வதற்கு வள்ளலாரின் உரைநடைப் பகுதியைப் படிக்க வேண்டியது மிக அவசியம். திருவருட்பாவில் வரும் நுட்பமான சொற்களுக்கு எல்லாம் இந்த நூலில், வள்ளலார், சுத்தசன்மார்க்க விளக்கம் சொல்லி இருக்கிறார், எனவே இந்த உரைநடைப்பகுதியைப் படித்த பிறகே திருவருட்பா பாடலைப் படிப்பது, அந்தப் பாடலின் அடிப்படையான அனுபவப் பொருளைப் புரிந்து கொள்வதற்குத் துணைபுரியும்.**

**இந்நூல் ஒவ்வொரு தமிழரின் வீட்டிலும் இருக்க வேண்டிய ஞானக் களஞ்சியம் ஆகும்.**

நேரில் பெற

* சென்னை : வர்த்தமானன் ✆ : 24364174 / 65 66 67 27
* கோவை : விஜயா பதிப்பகம் ✆ : 2382614 / 2394614
* சேலம் : சந்திரா ✆ : 2265635
* திருச்சி : திருச்சி புக் ஹவுஸ் ✆ : 2764198 / 2766815
* மதுரை : செல்வி ✆ : 4380169 / 2343510
* நெல்லை : அருள் நந்தி சிவம் ✆ : 2339692 / 2338443
* திருவண்ணாமலை : ஸ்ரீ அருணா வரதன் ✆ : 250272 / 254600
* காஞ்சிபுரம் : குரு ✆ : 27260256
* விழுப்புரம் : கீதா ✆ : 225183 / 9865754879
* புதுக்கோட்டை : எஸ்.பி.எம். ✆ : 230035 / 9443531950
* தஞ்சாவூர் : அன்னம் ✆ : 279288 / 9443159371
* தருமபுரி : சதீஷ் ✆ : 268112
* திண்டுக்கல் : சக்தி ✆ : 2426069
* பாண்டி : சித்ரா ✆ : 2337309 / 2335133

தபாலில் பெறக் கடிதம் எழுதுக. வி.பி.பி.யில் நூலினை அனுப்புகிறோம்.

**சலுகை விலை ரூ.100 மற்றும் தபால் செலவு ரூ. 25 சேர்த்து ரூ. 125 மட்டும் தபால்காரரிடம் கொடுத்துப் பெறலாம்.**

கடிதம் எழுத வேண்டிய முகவரி **வர்த்தமானன் பதிப்பகம்** 40, சரோஜினி தெரு, தியாகராய நகர், சென்னை 17.

**✣ வள்ளலார் அவதரித்த மாதமான அக்டோபர் முழுவதும் இச்சலுகை உண்டு ✣**

# விழிப்புணர்வு

குரோம்பேட்டை வைஷ்ணவக் கல்லூரியின் உணவு இடைவேளை. கூட்டம் கூட்டமாக உட்கார்ந்து அரட்டை அடித்துக் கொண்டிருந்த மாணவிகளிடையே நுழைந்து ''ஹலோ கேர்ள்ஸ்... திடீர்னு உங்க முன்னால ஒரு பல் மருத்துவர் வந்து நின்னா... அவங்ககிட்ட என்னவெல்லாம் சந்தேகம் கேட்பீங்க?'' என்றதுதான் தாமதம்... தங்கள் மனதிலுள்ளவற்றை அப்படியே உதிர்த்து விட்டார்கள். அவற்றை அப்படியே எடுத்துக்கொண்டு போய் சென்னை அண்ணாநகரிலுள்ள பல் மருத்துவ நிபுணர் டாக்டர் கலைச்செல்வியிடம் கொட்டினோம். மாணவிகளின் கேள்விகளும் டாக்டரின் பதில்களும்...





**வாய் துர்நாற்றம் ஏன் ஏற்படுகிறது?**

"வாய் துர்நாற்றத்துக்கு புகை பிடித்தல், பாக்கு, பான்பராக் போன்றவற்றைப் போடுதல், பல்லுக்கு இடையிலுள்ள காறைகள் எனப் பல காரணங்கள் உண்டு. கோணல் பற்கள் உடையவர்கள், அதிகத் தண்ணீர் அருந்தாமல் உடலிலுள்ள தேவையற்ற கழிவுப் பொருட்களை வெளியேற்றாமல் இருப்பவர்கள், டயட் என்கிற பெயரில் சாப்பிடாமல் பட்டினிக் கிடப்பவர்கள் போன்றோரும் இந்த வாய் துர்நாற்றத்தால் பாதிக்கப் பட வாய்ப்பிருக்கிறது."

**இதைத் தடுக்க என்னவெல்லாம் செய்யலாம்?**

"மூன்று மாதங்களுக்கு ஒருமுறை பல் மருத்துவரை அணுகி, பல்லைச் சுத்தப் படுத்திக்கொள்ள வேண்டும். மருத்துவர் ஆலோசனைப்படி மௌத் வாஷ் பயன் படுத்த வேண்டும்.

கோணல் பற்கள் உடையவர்கள் முகச் சீரமைப்பு நிபுணரை அணுகி, சீரற்ற பற்களைச் சீர்படுத்திக்கொள்ள லாம். பல் துலக்கும் முறையையும் சரி செய்ய வேண்டும். காலையில் ப்ரஷ் செய்தவுடன் மௌத் வாஷ் உபயோகிப் பதும், மதிய உணவுக்குப் பிறகு ப்ரஷ் செய்துவிட்டு மௌத்வாஷ் உபயோகிப் பதும் நல்லது. பணிபுரிபவர்களுக்கு இது சாத்தியமில்லை எனினும் மௌத் வாஷாவது செய்ய வேண்டும். மதிய உணவில் பூண்டு, வெங்காயம் போன் றவற்றைத் தவிர்ப்பது நல்லது. தவிர்க்க இயலாதவர்கள் மௌத் வாஷ் உப யோகிக்க வேண்டும். இப்படிச் செய்த பிறகு ஐஸ்க்ரீம், பிஸ்கெட் போன்ற



உணவுகளைச் சாப்பிடக் கூடாது. இந்த முறையைக் காலை, மதியம், மாலை என்று சரியாகக் கடைப்பிடித்தால் வாய் துர்நாற்றம் வராமல் இருக்கும். பற்களும் சொத்தை ஆகாமல் பளிச்சென்று இருக்கும்."

**பாக்கு, சிகரெட் பயன்படுத்துவதால் பற்கள் எந்த அளவுக்குப் பாதிப்புக்குள்ளாகின்றன?**

"பாக்கு, சிகரெட் போன்றவற்றைப்


• டாக்டர் கலைச்செல்வி

# நிறம் மாறும் பற்கள்!

பயன்படுத்துவதால் பற்களில் கறைகள் படிந்து, அதன் நிறத்தையே மாற்றி விடுகின்றன. சிகரெட் அதிகமாக உபயோகிப்பதால் புற்றுநோய் ஏற்படும். வாயில் துர்நாற்றம் அதிகமாக வீசக் கூடும். புகைப்பிடிப்பதை நிறுத்த இயலாதவர்களுக்கு நிக்கோடின் சூயிங்கம் அறிமுகமாகியுள்ளது. அதை மென்று கொஞ்சம் கொஞ்சமாக புகைப்பிடித்தலைத் தவிர்த்து விடலாம். பாக்கு உபயோகிப்பதால் சப் மியூக்கஸ் ஃபைப்ரோஸிஸ் பகுதி பாதிப்படைந்து, வாயை அகலத் திறக்க முடியாது. இப்பிரச்னை இளைஞர்களிடம் அதிகம் காணப்படுவது வருத்தமான விஷயம்."

**சொத்தைப் பல் பிரச்னைக்குத் தீர்வுதான் என்ன?**

"பல் மருத்துவர் என்றாலே பல்லைப் பிடுங்கி விடுவார் என்ற எண்ணம் தவறு. சொத்தை வந்தால் அதைப் பாதுகாத்துக் கொள்ள பல வழிகள் உண்டு. ரூட் ட்ரீட்மெண்ட் (Root Treatment) மூலம் பல் இடுக்குகள் எவ்வளவு ஆழமாக இருந்தாலும் ஃபில்லிங் மெட்டீரியல் மூலம் நிரப்பிவிட முடியும். பற்களின் இடுக்கில் ஏதேனும் சிக்கிக்கொண்டால் நூலைக் கொண்டு (flossing) பற்களின் நடுவில் மாட்டிக் கொண்டிருக்கும் உணவுப் பொருட்களை சுலபமாக எடுத்து விடலாம். சொத்தைப் பல் வந்தவர்கள் கண்டிப்பாக இனிப்பு சாப்பிடுவதைத் தவிர்த்து, பழ வகைகளைச் சாப்பிடுவது சிறந்தது. சொத்தைப் பல்லை அடைத்த பிறகும் மீண்டும் சொத்தைப் பல் வராமல் இருக்க ஃப்ளோரைடு மௌத் வாஷ் பயன்படுத்த வேண்டும்."

**மாதத்தில் குறிப்பிட்ட சில நாட்களில் மட்டும் பல்லில் இரத்தம் வருவது... பிறகு வைத்தியம் இன்றியே தானாக நின்றுவிடுவது ஏன்?**

"இது பெண்களின் உடலில் ஏற்படும் ஹார்மோன் மாற்றத்தின் விளைவு. பற்களை நன்றாகச் சுத்தப்படுத்துவோருக்கு இப்பிரச்னை வராது."

**பல்லில் ஏற்படும் மாற்றங்கள் மற்ற நோய்களின் முன்னறிவிப்பு என்கிறார்களே...**

"ஆமாம். சர்க்கரை வியாதி, டி.பி, எய்ட்ஸ் போன்ற நோய்களின் அறிகுறிகளைக்கூட பற்களை வைத்துக் கண்டு பிடித்துவிடலாம். அதற்காக, பற்களால் ஏற்படுகின்ற பிரச்னைகளுக்கெல்லாம் மேற்கண்ட நோய்கள்தான் காரணம் என்று தவறாக நினைத்துவிடக் கூடாது."

- ம. சௌந்தர்யா

படங்கள்: பொள்ளாச்சி சுந்தரம்



# கல்கி



2006 அக்டோபர் 29
விய ஐப்பசி 12
மலர் : 65
இதழ் : 13

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

## வஞ்சகக் கேலிக் கூத்து!

சென்னை நகரில் உள்ளாட்சித் தேர்தல் என்ற பெயரில் வஞ்சகக் கேலிக் கூத்து நடந்தேறியிருக்கிறது! கட்சிப் பாகுபாடின்றி பல இடங்களில் வேட்பாளர்களும் அவர்களுடைய ஆதரவாளர்களும் வன்முறையிலும் கள்ள வோட்டுப் பதிவிலும் ஈடுபட்டுள்ளனர். காவல் துறையால் சமாளிக்க முடியாத அளவுக்கு வெட்டு-குத்து என்று விபரீதங்கள் பரவலாக நடந்திருக்கின்றன.

மதுரையில் நடந்த இடைத் தேர்தல்கூட 'அமைதி'யாக நடந்து முடிந்ததாகக் கூறப்பட்டாலும், அந்த அமைதியை நிறுவ மூவாயிரம் போலீஸாரும் மூன்று பட்டாளம் ராணுவத்தினரும் மிகப் பெரிய அளவில் குவிக்கப்பட்டிருந்தனர். ஒரே ஒரு சட்டமன்றத் தொகுதியில் ஓர் இடைத் தேர்தலுக்கு இவ்வளவு பாதுகாப்பு!

மொத்தத்தில் தமிழகத்தில் ஜனநாயகம் என்பது குண்டர்கள் நாயகம் ஆகிவிட்டது; அடிமட்ட ஜனநாயகம் அர்த்தம் இழந்துவிட்டது. அரசியல் கலப்பின்றி உள்ளூர்ப் பிரமுகர்களும் உழைப்பாளிகளும் பொறுப்பு சுமக்க முன் வந்து, உள்ளாட்சி தேர்தலில் நின்று, வென்று மக்கள் தொண்டாற்றியது பழங்கதை. எதற்கும் அஞ்சாத ரௌடிகள் முக்கிய கட்சிகளின் ஆதரவில், அவற்றின் சின்னத்தில் போட்டியிட்டு, எந்த விலை கொடுத்தாவது ஜெயிக்க வேண்டும் என்று இறங்கியிருப்பது இன்றைய சோகக் கதை.

இவர்களுக்காகப் பிரசாரம் செய்ய மத்திய அமைச்சர்களென்ன, மாநில முதல்வர் என்ன, மாநில அமைச்சர்கள் பட்டாளம் என்ன... ஒரே அமர்க்களம்தான்!

பணத்தை வாரி இறைத்துப் பிரசாரம் செய்வது, மக்களை 'அன்பளிப்பு'களால் மயக்குவது போன்றவை உள்ளாட்சித் தேர்தல்களிலும் ஊடுருவி விட்டன. கட்சித் தலைமையின் பண பலத்தோடு வேட்பாளரின் புஜ பலமும் படைபலமும் இணைந்து






மிரட்டுகின்றன!

வாக்குச் சீட்டுகளை மொத்தமாக அள்ளிச் சென்று போலி வாக்குப் பதிவு செய்வது; எதிர்கட்சி வேட்பாளர் அல்லது ஆதரவாளரைத் தாக்கி அடித்து நொறுக்குவது என்று விதவிதமான வன்முறைகள், ஏதோ தேர்தல் நடைமுறைகளைப் போல் பகிரங்கமாக நடந்தேறியிருக்கின்றன.

இத்தனைக்கும் தேர்தலுக்கு முன்னதாக ஏராளமான ரௌடிகள் முன்னெச்சரிக்கையாகக் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள். இந்தச் சூழ்நிலைக்காக வருந்துவதற்குப் பதிலாக, அரசியல் தலைவர்கள் பரஸ்பரம் குற்றம்சாட்டி அறிக்கை விட்டுக் கொண்டிருக்கிறார்கள்!

பிரசாரத்தின்போதே வன்முறையைத் தூண்டும் வகையில் ஜெயலலிதா பேசினார்.

தோழமைக் கட்சியினரே குறை கூறும் அளவுக்குத் தி.மு.க.வினரும் வன்முறையில் இறங்கியுள்ளனர்.

கருணாநிதியோ இந்தத் தேர்தலில் நடந்த வன்முறை, 2001 ஜெ. ஆட்சியின்போது நடந்த உள்ளாட்சித் தேர்தல் வன்முறையைக் காட்டிலும் குறைவுதான் என்று கணக்கு காட்டுகிறார். இந்தக் கணக்கு கருணாநிதிக்குத் திருப்தி அளிக்கலாம்; சராசரி குடிமகனுக்கு எரிச்சலைத்தான் உண்டு பண்ணுகிறது.

உள்ளாட்சித் தேர்தல்கள் அரசியல்மயமானதால் மக்களுக்கு ஏற்பட்டுள்ள இழப்பு குறித்து யாருமே சிந்திப்பதில்லை. பேட்டை தாதாக்கள் அல்லது அவர்களது ஆதரவு பெற்றவர்களே தேர்தலில் நிறுத்தப்படுவதால், அவர்கள் ஜெயித்து வரும்போது உள்ளாட்சிப் பணிகள் உதாசீனப்படுத்தப்படுகின்றன. ஏராளமாகச் செலவழித்து வெற்றியை விலைக்கு வாங்கும் அரசியல்வாதி, போட்ட பணத்தை எடுக்க லஞ்ச - ஊழலில் ஈடுபடுவான்.

இத்தேர்தல்களிலிருந்து கட்சி அரசியல் களையப்படாதவரை உள்ளாட்சி நிர்வாகமும் உருப்படாது. கட்சி சின்னங்களில் வேட்பாளர்கள் போட்டியிட முடியாத அளவுக்குச் சட்டங்கள் திருத்தப்பட வேண்டும். வேட்பாளர்கள் தேர்வில், பண்பாடும் கண்ணியமும் காக்கப்பட்டு, சமுதாயத்தில் நல்ல பெயரெடுத்தவர்களுக்கு வாய்ப்பு தரப்படவேண்டும்.

உள்ளாட்சி என்பது மக்களுடைய அன்றாட அடிப்படை வசதிகளை வழங்கும் அமைப்பு. அது குலைந்து போனால் மக்களின் அதிருப்தியால் விளையக்கூடிய அபாயங்கள் தேர்தல் வன்முறையைக் காட்டிலும் மோசமானதாக இருக்கும். ●

# சிறந்த நூல்களைப் படிக்கப் படிக்க மனிதன் ஆனந்தம் அடைகிறான்

## எஸ்.வி.வி.

1. கோபாலன் ஐ.ஏ.எஸ். ரூ.55.00
2. ரமணியின் தாயார் ரூ.40.00
3. ஹாஸ்யக் கதைகள் ரூ.40.00
4. செல்லாத ரூபாய் ரூ.32.00
5. சம்பத்து ரூ.63.00
6. வசந்தன் ரூ.40.00
7. புது மாட்டுப் பெண் ரூ.21.00
8. சபாஷ்! பார்வதி! ரூ.25.00
9. வாழ்க்கையே வாழ்க்கை ரூ.45.00
10. சௌந்தரம்மாள் ரூ.65.00
11. உல்லாச வேளை ரூ.65.00
12. பொம்மி ரூ.23.00

## எஸ்.வி.கே.

1. பலே! பலே! கதைகள் ரூ.90.00
2. சபாஷ்! கதைகள் ரூ.90.00
3. பேஷ்! பேஷ்! கதைகள் ரூ.90.00

## தேவன்

1. மிஸ்டர் வேதாந்தம் (இரண்டு பாகம்) ரூ.170.00
2. ஐந்து நாடுகளில் அறுபது நாள் (மூன்று பாகம்) ரூ.260.00
3. ராஜத்தின் மனோரதம் ரூ.50.00
4. மிஸ் ஜானகி ரூ.75.00
5. சீனுப்பயல் ரூ.55.00
6. விச்சுவுக்குக் கடிதங்கள் ரூ.42.00
7. ராஜியின் பிள்ளை ரூ.45.00
8. ஏன் இந்த அசட்டுத் தனம் ரூ.55.00
9. போக்கிரி மாமா ரூ.65.00
10. அப்பளக் கச்சேரி ரூ.50.00
11. ரங்கூன் பெரியப்பா ரூ.52.00
12. சொன்னபடி கேளுங்கள் ரூ.54.00

## மெரீனா

1. சாந்தி எங்கே? ரூ.40.00
2. கால் கட்டு ரூ.36.00
3. சாமியாரின் மாமியார் ரூ.35.00
4. மாப்பிள்ளை முறுக்கு ரூ.50.00
5. அடாவடி அம்மாக்கண்ணு ரூ.28.00
6. எங்கம்மா ரூ.55.00
7. அப்பா ஒரு அப்பாவி ரூ.28.00
8. நேர்மை ரூ.60.00
9. நாடகம் போட்டுப் பார் ரூ.30.00
10. ஊர் வம்பு ரூ.28.00
11. கல்யாண மார்க்கெட் ரூ.30.00
12. வடபழனியில் வால்மீகி ரூ.30.00
13. மாமியார் மெச்சிய மாப்பிள்ளை ரூ.32.00
14. சீதா கல்யாணம் ரூ.28.00

## சோ

1. கூவம் நதிக்கரையினிலே (பாகம்–2,3) ரூ.72.00
2. எங்கே பிராமணன்? ரூ.100.00
3. துக்ளக் படமெடுக்கிறார் ரூ.30.00
4. காமராஜை சந்தித்தேன் ரூ.33.00
5. முகமது பின் துக்ளக் ரூ.28.00
6. யாருக்கும் வெட்கமில்லை ரூ.35.00
7. இந்தியா எங்கே போகிறது? ரூ.12.0
8. துக்ளக் கேள்வி – பதில் II ரூ.45.0
9. சாதல் இல்லையேல் காதல் ரூ.41.0
10. உண்மையே உன் விலை என்ன? ரூ.42.0
11. உறவுகள் இல்லையடி பாப்பா ரூ.20.0
12. சம்பவாமி யுகே! யுகே! ரூ.30.0
13. வெறுக்கத்தக்கதா பிராமணீயம்? ரூ.30.0

கலைமாமணி எஸ்.எம். உமர் எழுதிய

**கலை உலக சக்கரவர்த்திகள் – பாகம் 2**

50 ஆண்டுகள் திரைப்பட அனுபவம் உள்ள நூலாசிரியரின் அனுபவச் செய்திகள், அரிய விவரங்கள் அடங்கிய நூல். எம்.ஜி.ஆர்., சிவாஜி, பி.யு. சின்னப்பா, டி.ஆர். மகாலிங்கம், ரஞ்சன் கே.ஆர். ராமசாமி, எம்.ஆர். ராதா, கொத்தமங்கலம் சுப்பு, டி.ஆர். ராஜகுமாரி, சாவித்திரி ஆகியோர் பற்றி கூறுவது

ரூ.200-0

## பி.எஸ்.ராமையா

1. மல்லியம் மங்களம் ரூ.40.0
2. பிரசிடெண்ட் பஞ்சாட்சரம் ரூ.40.0
3. பாஞ்சாலி சபதம் ரூ.25.0
4. பதச் சோறு ரூ.56.0
5. பூவிலங்கு ரூ.52.0
6. நந்தா விளக்கு ரூ.80.0
7. மலரும் மணமும் ரூ.70.0
8. பாக்கியத்தின் பாக்கியம் ரூ.33.0
9. புதுமைக் கோயில் ரூ.33.0

**சமஸ்கிருத நாடக வரிசை :**

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் தலைசிறந்த மகா கவிகளால் புனையப்பட்ட நாடகங்களின் தமிழாக்கம் வடமொழி வல்லுனர்களான

**ஏ.வி. சுகவனேச்வரன் – பி.எஸ். ராமமூர்த்தி**

எழுதியது

| | | | |
|---|---|---|---|
| சாகுந்தலம் | – ரூ.28.00 | ஸ்வப்னவாஸவதத்தம் | – ரூ.23. |
| ரத்னாவளி | – ரூ.21.00 | நாகானந்தம் | – ரூ.20. |
| அவிமாரகம் | – ரூ.18.00 | இரு ஓரங்க நாடகங்கள் | – ரூ.16. |
| மிருச்ச கடிகம் | – ரூ.28.00 | | |
| முத்ரா ராக்ஷஸம் | – ரூ.22.00 | மாளவிகாக்னிமித்ரம் | – ரூ.22. |

**கு.ப.ரா. எழுத்துக்கள்** (8 தொகுதிகள்) **ரூ. 700-0**

**ராஜீவ் காந்தி கொலை**

விடை கிடைக்காத வினாக்களும்
கேட்கப்படாத கேள்விகளும்

**டாக்டர் சுப்ரமண்ய சுவாமி**

ரூ. 125.00

அல்லயன்ஸ்

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவன

64, (ப. எண் : 244) ராமகிருஷ்ணா மடம் சாலை
தபால் பெட்டி எண்: 617, மயிலாப்பூர்,
சென்னை – 600 004. தொலைபேசி: 2464 13
e-mail : srinivasan@alliancebook.com
visit us at : www.alliancebook.com



புதிய பகுதி

# மண்ணில் ஒரு சொர்க்கம்!

ராம்குமார் பேசுகிறார்...



காக்னிசென்ட் டெக்னாலஜி சொல்யூஷன்ஸ் டைரக்டர்

**சா**ஃப்ட்வேர் வேலைதான் இன்றைய இளைஞர்களின் ஃபேஷன். சாப்ட்வேர் தொழில் மீதுதான் டாக்டர்கள், வக்கீல்கள், ஆடிட்டர்கள் அனைவருக்கும் கண். 'அடடா.. நாம் இதில் வேலை செய்யாமல் போய்விட்டோமே' என்று அவர்கள் அங்கலாய்ப்பது ஒருபுறமிருக்க, புதிதாகக் கல்லூரிகளுக்குள் நுழையும் பெரும்பாலான மாணவர்களுக்கும் சாஃப்ட்வேர்தான் கனவில் வந்து வந்து போகிறது.

எந்தத் தொழிலிலும் இல்லாத ஒரு சௌகரியம் சாஃப்ட்வேர் தொழிலில் உண்டு. இன்ஃபர்மேஷன் டெக்னாலஜி, கம்ப்யூட்டர் சயின்ஸ்,' எம்.சி.ஏ. படித்தவர்கள் மட்டும்தான் கணினி முன்பு அமர்ந்து வேலை பார்க்க முடியும் என்றில்லை. அது தண்ணீர் போல... எந்தப் படிப்பு படித்தவர்களோடும் தன்னை இணைத்துக்கொள்ளும். வேலை காலி இல்லை என்பதே இங்கு கிடையாது.

சரி, இந்த இடத்தில் கேள்விகள் எழலாம். எல்லோருக்கும் வேலை உள்ளது என்றால், கம்ப்யூட்டர் சயின்ஸ் படித்த

இளைஞர்கள் பலருக்கும் ஏன் ஒரு நல்ல வேலை கிடைக்கவில்லை? அடுத்தது, எந்தப் படிப்புப் படித்தாலும் எப்படி சாஃப்ட்வேரில் வேலை செய்ய முடியும்?

அதற்கு முன்பு ஒரு சின்ன ஃப்ளாஷ் பேக்! இந்திய சாஃப்ட்வேர் துறை எப்படியெல்லாம் கருவாகி உருவானது தெரியுமா? நான்கு அடுக்குகள் வழியே பயணிக்கிறது இதன் கதை. எழுபதில் பிறந்து எண்பதுகளில் தவழ ஆரம்பித்த குழந்தைதான் சாஃப்ட்வேர். சாமியைத் தேடி பக்தர்கள் செல்வதுபோல எங்கு சாப்ட்வேர் தோன்றியதோ - அதாவது அமெரிக்கா, ஐரோப்பாவை நோக்கிச் செல்ல ஆரம்பித்தனர் இந்திய மென்பொருள் வல்லுநர்கள். இன்று தலைகீழ் நிலைமை! கம்ப்யூட்டர் படித்தவர்களை நோக்கித் தம் கைகளை நீட்டி வரவேற்கின்றன சாஃப்ட்வேர் கம்பெனிகள்.

இந்தியர்களின் வேலைப்பாடு அயல்நாட்டினருக்குப் பிடித்துப் போனது. நல்ல மதிப்பு உருவானது. 1985 முதல் 1995 வரை அடுத்த காலமாற்றம் ஆரம்பித்தது. டெக்ஸாஸ் இன்ஸ்ட்ருமெண்ட்ஸ், மோட்டரோலா, ஜி.ஈ., அமெரிக்கன் எக்ஸ்பிரஸ், சிட்டி குரூப் போன்ற கம்பெனிகள் இந்தியாவில் தங்களுடைய கிளைகளைத் திறந்தன. கூடவே இந்திய மென்பொருள் நிறுவனங்களுக்கு நம்பிக்கையாக ப்ராஜெக்ட்களும் கொடுக்கப்பட்டன. அதாவது, வெளிநாட்டிலிருந்து கொடுக்கப்படும் கட்டளைக்கேற்ப அதை மென்பொருளாக மாற்றுவார்கள் இந்திய மென்பொருளாளர்கள்.

இன்று சாஃப்ட்வேர் துறையில் பரவலாக உச்சரிக்கப்படும் 'ஆன்சைட்' என்கிற சொல் செயல் வடிவம் பெற்றது 1995 வாக்கில்தான். 'அமெரிக்காவுக்கு வந்து எனக்கு வேண்டியவற்றைச் சரி செய்து கொடு' என்று அமெரிக்கக் கம்பெனிகள் கேட்க, ஆண்டிப்பட்டியில் பிறந்தவர்கூட வெகு சகஜமாக அமெரிக்கா, ஐரோப்பாவுக்குப் பறப்பதற்குச் சுலபவழி பிறந்தது. இந்தச் சமயத்தில்தான் டெலிகம்யூனிகேஷன் வளர்ச்சி இந்தியாவில் புரட்சியை ஏற்படுத்திக் கொண்டிருந்தது.

இரண்டாயிரமாம் ஆண்டு... பிறந்தது இன்டர்நெட். இந்தியாவில் மூலைக்கு மூலை ப்ரவுசிங் சென்டர்கள் தோன்றின. தொழில்நுட்பம், நாடுகளுக்கிடையே இருந்த எல்லைகளைத் தகர்த்தது. அதன்பின் தொழில்நுட்பப் பணிகளை மட்டுமே செய்துவந்த இந்தியர்கள், ஆலோசனைகளையும் சொல்ல ஆரம்பித்தனர். அதுதான் பி.ப்பி.ஓ. மற்றும் கால் சென்டர்கள்.

இந்த நான்கு அடுக்கு முன்னேற்றங்களும் இன்று ஐ.டி. துறையை, பணம் காய்க்கும் மரமாக மாற்றியிருக்கின்றன. வருடத்துக்கு சாஃப்ட்வேர் ஏற்றுமதி மூலம் நமக்குக் கிடைக்கும் பணம் 1,05,000 கோடி. இன்று இந்தியாவில் 14 லட்சம் சாஃப்ட்வேர், பி.ப்பி.ஓ. தொழிலைச் சார்ந்த ஊழியர்கள் உள்ளனர். அடுத்த மூன்று வருடங்களில் மட்டும் ஐந்து லட்சம் பேருக்கு இத்துறையில் வேலை கிடைக்க உள்ளது. எங்களின் காக்னிசென்ட் கம்பெனிக்கு உலகம் முழுக்க முப்பத்து மூன்றாயிரம் மென்பொருள் வல்லுநர்கள் உள்ளனர். அதில் இருபத்தைந்தாயிரம் பேர் இந்தியாவில் பணி புரிகின்றனர். தமிழ்நாட்டில் மட்டும் பதினான்காயிரம் பேர்.

இத்தனை வேலை இருக்கிறதா? பிறகு ஏன் பி.ஈ. கம்ப்யூட்டர் இன்ஜினீயரிங் படித்த இளைஞர்கள் பலரும் வேலை தேடி அலைகிறார்கள்?

கம்ப்யூட்டர் படித்து முடித்த மாணவர்களில் 35% மாணவர்களுக்கு மட்டுமே உடனடியாக வேலை கிடைக்கிறது. துறை சம்பந்தப்பட்ட அறிவு, கம்யூனிகேஷன் ஸ்கில்ஸ், ஆங்கில அறிவு

"குடும்பப் படம்னு சொல்றீங்க. அதே நேரத்துல பயங்கர சண்டைக் காட்சிகள் நிறைந்த படம்னு விளம்பரம் கொடுக்கறாங்களே...?"

"படத்துல மாமியாருக்கும் மருமகளுக்கும் ஆகாதுங்க."

- அஜித்லால்

போன்றவற்றில் திறன் குறைவாக இருப்பதால்தான், கையில் வந்து விழ வேண்டிய பழம், இன்னும் பலருக்கும் எட்டாக் கனியாகவே உள்ளது.

இது நம் தலையில் நாமே மண்ணைப் போட்டுக் கொள்வதற்குச் சமம். இதிலிருந்து இந்தியா உடனடியாக விடுபட வேண்டும் என்பதுதான் இன்றைய அவசர அறைகூவல்! இந்த நோக்கத்தில், துறை சார்ந்த நிறுவனங்களான நாஸ்காம், சி.ஐ.ஐ. போன்றவை மாணவர்கள் தேர்வில் வெற்றி பெறுவதற்கான சுலப வழிமுறைகளை மேற்கொண்டு வருகின்றன.

இப்படியொரு நிலைமையும் பற்றாக்குறையும் இந்தியாவுக்குத் தொண்ணூறுகளில் ஏற்பட்டன. அப்போது என்.ஐ.ஐ.டி, ஏப்டெக், எஸ்.எஸ்.ஐ., சி.எஸ்.ஐ.



போன்ற தனியார் நிறுவனங்கள் புதுப் புது கோர்ஸ்களை உருவாக்கி மாணவர்களிடையே விழிப்புணர்ச்சியை உண்டாக்கின. ஜிநிட் என்கிற படிப்பு, பல மாணவர்களை நேரடியாக சாஃப்ட்வேருக்குள் கொண்டு வந்தது. இன்றைக்கும் சிவில், மெக்கானிக்கல் இன்ஜினியர்கள் 'ஆட்டோகேட்' படித்தால், அவர்கள் துறை சார்ந்த வேலையையே செய்யலாம். அக்கவுண்ட்ஸ் படித்தவர்கள் டேலி கோர்ஸ் படிக்க வேண்டும். இப்படி ப்ரோகிராமிங் படித்துத்தான் ஐ.டி.யில் வேலை பார்க்க முடியும் என்றில்லை. அவர்கள் தங்களுடைய துறை சார்ந்த வேலையையே இதிலும் செய்ய முடியும்.

ஏன், சாஃப்ட்வேர் வேலைகள் எல்லாம் உழைப்பிலும் நேரத்திலும் சிரத்தையைக் காட்டும் ஜப்பானியர்களுக்குச் செல்லாமல் இந்தியர்களுக்கே கிடைக்கின்றன? காரணம் சிம்பிள். ஜப்பானின் மக்கள் தொகை பதின்மூன்று கோடிகூட கிடையாது. ஆனால் இந்திய மக்கள் தொகை ஜப்பானைவிட பத்து மடங்கு அதிகம். அமெரிக்காவில் ஆண்டுக்கு எத்தனை புது கம்பெனிகள் ஆரம்பித்தாலும் அவர்களுக்குத் தகுதி வாய்ந்த மென்பொருளாளர்களை இந்தியாவால் சப்ளை செய்ய முடியும்.

அடிப்படை கம்ப்யூட்டர் அறிவு, ஆங்கில அறிவு, கம்யூனிகேஷன் ஸ்கில் ஆகியவை கட்டாயம் இந்தத் துறைக்குள் நுழைவதற்கான படிகள். கற்றறிவது சுலபம்; அவசியம். ஏனெனில் ஆரம்ப கட்டத் தேர்வுகளைத் தாண்டிவிட்டால், இதில் உங்களுக்குக் கிடைக்கும் வாய்ப்புகள் கொஞ்ச நஞ்சமல்ல. ஆட்டோமோடிவ் எலெக்ட்ரானிக்ஸ், டெலிமெடிசின், மெடிக்கல் எலெக்ட்ரானிக்ஸ் போன்ற புதுப் பெயர்களும் புது வேலைகளும் இன்று தோன்றியிருக்கின்றன. என்டர்டெய்ன்மெண்ட் இன்னொரு பக்கம் ஐ.டி. துறைக்கு ஜீன்ஸ், டீசர்ட் மாட்டியிருக்கிறது. அனிமேஷன், கேம்ஸ் என கிரியேட்டர்களும் இன்று கம்ப்யூட்டர் பக்கம் சாய்ந்துவிட்டனர். ஒரு கார் உருவாகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள், அதில் ஒரு மெக்கானிக்குக்கு உள்ள வேலையைவிட சாஃப்ட்வேர் இன்ஜினியர்களுக்குத்தான் வேலை அதிகம்.

கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டதுபோல் இந்த வேலையில் தவிக்கத் தேவையில்லை. கை நிறையச் சம்பளம், வெளிநாட்டு வேலை, சொகுசு வாழ்க்கை என்று மண்ணிலேயே சொர்க்கத்தைக் காட்டிவிடும்.

**- ச.ந.கண்ணன்**

படங்கள் : **ஸ்ரீஹரி**

'இத்தகைய பாடல்களைப் பிரசாரத்துக்குப் பயன்படுத்தி எம்.ஜி.ஆர். ஆட்சிக்கு வந்தார்' என 'வாஷிங்டன் போஸ்ட்', எம்.ஜி.ஆர். முதல்வரானதும் ஒரு சிறப்புக் கட்டுரை வெளியிட்டிருந்தது. 'இன்று போல் என்றும் வாழ்க' திரைப்படத்தில் இடம்பெற்ற 'இது நாட்டைக் காக்கும் கை, வீட்டைக் காக்கும் கை' என்ற அப்பாடலை முழுதாகப் பிரசுரித்து, எழுதிய கவிஞர் முத்துலிங்கத்தின் புகைப்படத்தையும் பதிப்பித்துக் கௌரவித்திருந்தது.

பாடல்கள் மூலம் ஒருவர் முதல்வராக முடியும் என்பது அறிவுக்குப் பொருந்தாத வாதமாக இருக்கலாம். ஆனால், எம்.ஜி.ஆரின் திரையுலக வளர்ச்சிக்கும் அரசியல் வளர்ச்சிக்கும் திரைப் பாடல்களே பேருதவி புரிந்தன என்பது மறுக்க முடியாத உண்மை. மக்களுடன் தமக்குள்ள நெருக்கத்தை வெளிப்படுத்தவும் தமது கொள்கைகளைப் பிரபலப்படுத்திக் கொள்ளவும் திரைப் பாடல்கள் எம்.ஜி.ஆருக்குத் துணை புரிந்திருக்கின்றன.

'வெள்ளிப் பணங்களை
அள்ளிக் கொடுக்கையில்
சட்டங்கள் மாறுதடா - அட
லட்சமும் ஊழலும்
தேசிய ரீதியில்
நர்த்தனம் ஆடுதடா' - என்று 'கூட்டுப்

**எம்.ஜி.ஆர் டெக்னிக்கை நாமும் ஃபாலோ பண்ணிட வேண்டியதுதான்!**



புழுக்கள்' திரைப்படத்தில் எழுதிய முத்துலிங்கம், சிவகங்கையை அடுத்த கடம்பங்குடி எனும் சிற்றூரைச் சேர்ந்தவர். பள்ளியில் மனப்பாடப் பகுதியாக இருந்த கம்பராமாயணப் பாக்களைப் படித்துவிட்டு, தமிழார்வம் கொண்டு தமது பதினைந்தாவது வயதிலிருந்தே கவிதை எழுதத் தொடங்கியவர்.

கவிதை எழுதுகிற ஆர்வம் தமிழ்ச் சூழலில் எங்கே உயரத்தை அடைகிறது என்று இளம் கவிஞர்களைக் கேட்டால், 'திரைப்படப் புகழில்' எனச் சொல்வார்கள். 'முரசொலி' பத்திரிகையில் உதவியாசிரியராகப் பணிபுரிந்த முத்துலிங்கம், எம்.ஜி.ஆர். தி.மு.க.வை விட்டு

11

விலகியதும் அவர் மீதுள்ள அன்பின் காரணமாக தாமும் விலகி 'அலை ஓசை' பத்திரிகையில் வேலைக்குச் சேர்ந்தார். 'அலை ஓசை' எம்.ஜி.ஆரின் ஆதரவு ஏடு. அந்தப் பத்திரிகையில் பணிபுரிந்தபோது பாலமுருகன் என்பவரின் அறிமுகம் கிடைத்து, அவருடைய சிபாரிசின் மூலம் 'பொண்ணுக்குத் தங்க மனசு' எனும் படத்தில் 'தஞ்சாவூரு சீமையிலே' எனும் பாடல் எழுத வாய்ப்புக் கிடைத்திருக்கிறது. வாய்ப்பைவிட, வாய்ப்பைத் தக்கவைக்கப் படுகிறபாடு இருக்கிறதே அது - தனி அத்தியாயம்.

கடந்த 1977-ல் 'மீனவ நண்பன்' என்றொரு திரைப்படம். அப்படத்துக்



என்றொரு சொல்லைப் பயன்படுத்தியிருப்பார். அந்தச் சொல் தருகிற பொருளை வியக்க, முழுப் பாடலும் மனனமாகிவிடும் இயல்புதான் முத்துலிங்கத்தின் தனித்துவம். சந்தங்களை ஈடுசெய்வதற்கென்றே தமிழில் சில அசைச் சொற்கள் உண்டு. அந்த அசைச் சொற்களைப் பயன்படுத்தாமல் எந்தக் கவிஞரும் திரைப்பாடலில் செழிக்க முடியாது. வெறுமனே அசைச் சொற்களைப் பயன்படுத்தாமல், பொருத்தமான இடத்தில் தேவைக்காக இட்டு நிரப்புவது தனிக்கலை.

கவித்துவமாகச் சொல்ல வேண்டுமாயின், அசைச் சொற்களையும் இசைச்

# உனக்குள் என்னை மறைத்து...

காக முத்துலிங்கம் முதலில் எழுதிய பல்லவி:

அழகுகளே உன்னிடத்தில்
அடைக்கலம் - உன்
அங்கங்கள் மன்மதனின்
படைக்கலம்

இந்தப் பல்லவியை இயக்குநர் ஸ்ரீதரிடம் காட்ட 'படைக்கலம்' என்றால் வெகுஜனத்துக்குப் புரியாது எனவும், 'அடைக்கலம்' என்றால் பாதிரியார் பெயரா என இசையமைப்பாளர் கேட்டதாகவும் கவிஞரே ஒரு நேர்காணலில் வெளிப்படுத்தினார். பிறகு, மெட்டுக்கு எழுதிய பாடல்தான்:

தங்கத்தின் முகமெடுத்து
சந்தனத்தில் உடலெடுத்து
மங்கையென்று வந்திருக்கும்
மலரோ - நீ
மாலைநேரப் பொன் மஞ்சள்
நிலவோ?

- ஏகமனதாக எல்லோராலும் ஏற்கப்பட்டு இன்றுவரை புகழுடன் இருக்கும் இப்பாடலில் 'மனராஜ்யம்'

சொற்களாக மாற்றும் வல்லமை முத்துலிங்கத்துக்கு மட்டுமே உண்டு.

'காஞ்சிப் பட்டுடுத்தி
கஸ்தூரிப் பொட்டு வைத்து
தேவதை போல்
நீ நடந்து வர வேண்டும் - அந்த
திருமகளும்
உன்னழகைப் பெற வேண்டும்.'

- அருவிகூட உன்னழகைப் பார்த்து நிமிர்கிறது என்ற ஆங்கில வர்ணனைக் கவிதைக்கு நிகராக, திருமகளும் உன்னழகைப் பெற வேண்டும் என்ற வரி 'வயசுப் பொண்ணு' படத்தில் இடம் பெற்றது. 78 - 79ஆம் ஆண்டுக்கான சிறந்த பாடலாசிரியர் விருதைப் பெற்றுத் தந்த

**யுகபாரதி**

இப்பாடல், முத்துலிங்கத்தின் முன்னகன்ற எழுத்து நெற்றியில் இடப்பட்ட மங்கலக் குங்குமம்.

தாய்மை பொருந்திய வார்த்தைகளால் வளரும் தலைமுறையை அரவணைப்பவர். வாரிசாக அவர் யாரையும் சுட்டாததற்கு அனைவரையும் அன்போடு நேசிக்கும் காரணம் எனலாமா?

கடுநீரில் வீழ்ந்து
துடிக்கின்ற மீன்போல்
தோகை நெஞ்சினில்
சோகம்
பொங்குதப்பா'

- வலிபெடுத்த சொற்களுக்குள் உணர்வுகளைச் சடை பின்னும் இலாகவம் வாய்ந்த முத்துலிங்கம், அட்சரம் பிசகமல் மெட்டுக்கு எழுதுவதில் சாதனையாளர் என்று இளையராஜாவால் புகழப்படுபவர்.

ஆறும் அது ஆழமில்ல
அது



• நா. முத்துலிங்கம்

**இவருடைய பாடல்களைப் பிரசாரத்தில் பயன்படுத்தி எம்.ஜி.ஆர். முதல்வர் ஆனார்.**

சேரும் கடலும் ஆழமில்ல
ஆழம் எது ஐயா
அந்தப்
பொம்பள மனசுதான்யா- என்று 'முதல் வசந்தம்' படத்துக்காக இவர் எழுதிய பாடலில் சித்தர்களின் தொனி வெளிப்படும். பெண்ணைக் குற்றவாளியாக்கி அல்லது பெண்ணை முன் நிறுத்திக் கேள்வி கேட்கும் பாடல்கள் மிகுந்த வரவேற்பைப் பெற்றிருக்கின்றன.

'எவ்வனப் பெண்மோகம்
எப்படியுண்டப் படிப்போல்
கவ்வனத்தில் உன்னைக்
கலந்திருப்ப தெக்காலம்?' - 235 கண்ணிகளைக் கொண்ட பத்திரகிரியார் பாடல் தொகுப்பில் இடம்பெற்ற சித்தர் ஞானக் கோவைக்கு ஈடாக இப்பாடலைக் கருதுகிறேன்.

'தண்ணியில கோலம்
போடு
ஆடிக் காற்றில் தீபம்
ஏற்று
ஆகாயத்தில் கோட்டை
கட்டு
அந்தரத்தில் தோட்டம்
போட்டு
ஆண்டவனைக் கூட்டி
வந்து
அவனை அங்கே காவல்
போடு
அத்தனையும் நடக்கும் ஐயா
ஆசை வச்சா கிடைக்கும்
ஐயா
ஆனா கிடைக்காது - நீ
ஆசை வச்ச மாது
அவள் நெஞ்சம் யாவும்
வஞ்சமே'

திரைப்படப் பாடல் ஆக்கத்தில் புதுமையும் உத்தியும் கைகூடி, அதே சமயம் நெடுங்காலத்துக்கு இத்துறையில் நீடித்திருப்பது பெரிய விஷயம். ஏறக்குறைய 1500-க்கும் மேலான பாடல்களை இதுவரை எழுதியுள்ள முத்துலிங்கம், அரசவைக் கவிஞராகவும் மேலவை உறுப்பினராகவும் இருந்தவர். நாமக்கல் கவிஞர், கண்ணதாசன், புலமைப்பித்தனுக்குப் பிறகு அப்பதவியை வகித்து வந்தவர், 'அரசவைக் கவிஞர் என்பது இலாகா இல்லாத அமைச்சரைப் போல ஓர் அலங்காரப் பதவி' என்கிறார். கலைத் துறை வித்தகர் விருது, பாவேந்தர் பாரதிதாசன் விருது, சிறந்த பாடலாசிரியர் விருது, ஆதித்தனார் விருது ஆகியன பெற்றிருக்கும் முத்துலிங்கம், தமது பதினைந்தாவது வயதில் எழுதிய முதல் கவிதையை அனுப்பிய பத்திரிகை எது தெரியுமா? கல்கிதான்!

'வானத்து மீன்களை
மேகம் மறைத்தது போல்
தினமும் - எந்தன்
மோகத்தை நாணத்தில்
மூடி மறைத்திருந்தேன்
மனதில்' - என்று 'காக்கிச் சட்டை' திரைப்படத்தின் 'பட்டுக்கன்னம் தொட்டுக்கொள்ள' பாடலில் எழுதியிருப்பார். மண்ணுக்கடியில் வேர் மறைந்தது போல, விதைக்குள்ளே விருட்சம் தன்னை மறைத்தது போல, உனக்குள் என்னை மறைத்து வைத்திருக்கிறேன் என்று சொல்லாமல் மோகத்தை நாணத்துக்குள் மறைத்து வைத்தேன் என்கிறார். தமிழிலக்கியத்தில் தோய்ந்த ஞானமுடையவர் முத்துலிங்கம். நுனிப்புல் மேயாமல், ஆழ அகலத்தை அலசிப் பார்த்து, அவற்றின் சுவை நுரைகளை தம் எழுத்தில் கொண்டுவர எத்தனிப்பவர். 'உன்னால் முடியும் தம்பி' திரைப்படத்தின் 'இதழில் கதை எழுதும் நேரமிது' பாடலில்

'நாளும் நிலவது தேயுது
மறையுது
நங்கை முகமென
யாரதைச் சொன்னது - என்று கேட்டிருப்பார்.

சிந்தனையை இசைக்குள் கொண்டு வருவது எளிதன்று. அதையும் உரையாடல் வகைக்குள் கொண்டு வருவது மிகக் கடினம். தற்போதும் பாடல்களில் கேள்வி பதில் வகை இருக்கிறது. எந்தக் கேள்வியும் சரியான பதிலைக்கொண்டதாகவோ, எந்த பதிலும் சரியான கேள்வியைக் கொண்டதாகவோ இருப்பதில்லை.

'நிலா தேய்ந்து மறைகிறது, பெண்ணின் முகமென யார் சொன்னது' என்ற பதிலுக்கு, ஆண் பாடுவதாக வருகிற வரியிலும் அந்தத் தொடர்ச்சியைச் சொல்லிச் செல்வார். 'கூட்டத்திலே கோயில் புறா' (இதயக்கோயில்), சின்னஞ்சிறு கிளியே (முந்தானை முடிச்சு), தேவன் கோயில் தீபம் ஒன்று (நான் பாடும் பாடல்), 'மணியோசை கேட்டு எழுந்து' (பயணங்கள் முடிவதில்லை), 'பிள்ளைத் தமிழ் பாடுகிறேன்' (ஊருக்கு உழைப்பவன்) என இவருடைய பாடல் பட்டியல் மிக மிக நீளமானது. 1978-ல் வெளிவந்த 'கிழக்கே போகும் ரயில்' திரைப்படத்தில் இடம்பெற்ற 'மாஞ்சோலைக் கிளிதானோ' பாடல் இவருக்கு தமிழக அரசின் தங்கப் பதக்கத்தைப் பெற்றுத் தந்தது. 'உதயகீதம்' படத்தில் இடம்பெற்ற 'சங்கீத மேகம்' பாடலில்,

உள்ளம் என்னும் ஊரிலே
பாடல் என்னும் தேரிலே
நாளும் கனவுகள்
ராக பவனிகள்
போகின்றதே
எந்தன் மூச்சும் இந்தப் பாட்டும்
அணையா விளக்கே' - என்று எழுதியிருப்பார். அணையா விளக்கு மட்டுமல்ல, கலங்கரை விளக்காகவும் இவருடைய பாடல்கள் இருப்பதைக் குலவிளக்குகள் குறித்து வைக்க வேண்டும். வெளிச்சத் தேவைகளை விளக்குகளே அறியும்.

(காற்று வீசும்)



**த**மிழ் சினிமாவில் சிறிய பட்ஜெட் படமென்றாலும் ஒரு பாட்டுக்காவது ஃபாரீன் போக வேண்டுமென்பது சம்பிராதயமாகி விட்டது. இதுவரை கிராமத்துக் காவியங்களை மட்டுமே திரையில் படைத்து வந்த சேரன் முதன்முறையாக சிட்டி சப்ஜெக்டில் 'மாயக் கண்ணாடி' படமெடுப்பதால் இப்போது இவரும் தம் யூனிட்டோடு ஃபாரீனுக்குக் கிளம்பிவிட்டார். நெதர்லாந்து, சுவிட்சர்லாந்து மற்றும் இத்தாலி ஆகிய நாடுகளில் ஒருமாதம் 'மாயக் கண்ணாடி'யின் பிம்பங்கள் படமாக்கப்படுகின்றன.

# வாசல் வரும் சந்தோஷம்!

"நான் அடிக்கடி பரிசோதனைகளில் ஈடுபடுவேன்" என்கிற திலகவதி ஐ.பி.எஸ். தமிழகத்தின் முதல் பெண் ஐ.பி.எஸ். தமது காவல் துறைப் பணி நெருக்கடியிலும் தம் உடலைப் பக்காவாக வைத்திருக்கும் ரகசியத்தை நம்மிடம் பகிர்ந்து கொள்கிறார்... உற்சாகமாக.

"தமிழர்களின் உணவு முறையை வெல்ல எந்த நாட்டவராலும் முடியாது. நம் முன்னோர்கள் உணவே மருந்தாய், மருந்தே உணவாய் வாழ்ந்தவர்கள். ஒவ்வொரு கீரையும் ஒரு மூலிகை, ஒவ்வொரு காய் வகையும் ஒரு மாமருந்து.

நம்முடைய பூஜை, விழாக்காலங்களைக் கூடப் பாருங்கள். அந்தந்தப் பருவகாலத்துக்கேற்ப பழமோ, காய் வகைகளோ இடம்பெறாமல் இருக்காது.

இப்படி உணவு முறைகளைச் சடங்குகளோடும், சம்பிரதாயங்களோடும் தொடர்புப்படுத்தி உடல் நலனைப் பாதுகாப்பது நம் தமிழ் மரபு.

ஆனால் இப்போதோ மிளகினை விட்டுவிட்டு மிளகாய்க்கு நகர்ந்துவிட்டோம். பீட்ஸா கலாசாரம், ஃபாஸ்ட் ஃபுட் பம்மாத்துகளுக்கு ஆட்பட்டுவிட்டோம்" என்றவர் தமது தினப்படி நடவடிக்கைகள் குறித்துப் பேசினார்.

"அதிகாலை 4.30 - 5.00 மணிக்குள் எழுந்து, இரவு 11 மணிக்கு உறங்கச் செல்வேன். எந்த நேரமும் சுறுசுறுப்பாக இருப்பதுதான் எனக்குப் பிடிக்கும்.

எனது பணியின் காரணமாகத் தொடர்ந்து நடைமுறைப்படுத்த முடியாவிட்டாலும் நடைப்பயிற்சி, சைக்ளிங், யோகாவை முடிந்தவரை செய்து வருகிறேன்.

எனக்கு வந்த சோதனைகளிலிருந்து மீண்டு வரவும், புத்துணர்ச்சியோடு இருக்கவும் நகைச்சுவை உணர்வும் இலக்கிய ஈடுபாடும் இசையில் உள்ள ஈர்ப்பும்தான் காரணம்.

அலுவலக டூர்களின்போது பழங்களைதான் அதிக அளவில் சேர்த்துக் கொள்கிறேன். இனிப்பு ஐஸ்கிரீம் வகைகள் இயல்பாகவே எனக்குப் பிடிக்காதவை. வெஜிடபிள் சாலட், காய்கறி சூப், சப்பாத்தி ரொம்பப் பிடிக்கும்.

பால் அருந்துவதுண்டு. எப்போதாவது ஒரு கப் டீ. இரவு உணவு பெரும்

- திலகவதி ஐ.பி.எஸ்.



பாலும் ஓர் ஆப்பிள் அல்லது ஏதாவது பழம், 1 குவளை பால் மட்டும்தான்.

பச்சைக்காய்கறிகள், செரிமானமாக நேரம் பிடிக்கும். போதிய உடலுழைப்பில்லையென்றால் அஜீரணக் கோளாறுகள் ஏற்பட வாய்ப்புண்டு. எனவே அரை வேக்காடான காய்கறிகள்தான் நல்லது.

பழங்களை ஜூஸ் போட்டு அருந்துவதைவிட கடித்துச் சுவைத்து, மென்று சாப்பிடுவதே நல்லது. அதுதான் நாக்கில் உமிழ்நீரைச் சுரக்க வைக்கும். உமிழ்நீரில் சுரக்கின்ற என்சைம்கள் உடலுக்கு மிகவும் அவசியம்.



அளவு குறைந்த உணவு, வீணாகுமே என்பதால் எடுத்துக்கொள்ளும் அளவுக்கதிக உணவு இரண்டுமே உடலுக்கு விஷமாக அமைந்துவிடும் என்பதை எல்லோரும் மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

நல்லெண்ணெய்க்கு அப்படி ஒரு பெயரை வைத்தவருக்கு நிச்சயம் பட்டமே கொடுக்கலாம்.

குடும்பங்களில் மாதத்தில் பத்து நாட்கள் நல்ல எண்ணெய், பத்து நாட்கள் கடலை எண்ணெய், பத்து நாட்கள் ரீஃபைன்ட் ஆயில் என்று சமையலில் பயன்படுத்தினால், ஆரோக்கியத்துடன் கூடிய சந்தோஷம் நம் வாசற்படியில் உட்கார்ந்திருக்கும்.



எப்பாடுபட்டாவது அசைவத்தைக் கைவிட வேண்டும். அதுதான் நமக் கும், அந்த உயிரினங்களுக்கும் நல்லது.

மேனகாகாந்தி தாம் எழுதியுள்ள ஒரு நூலில் மரணத் தறுவாயில் விலங்கினங்களுக்குச் சுரக்கும் என்சைம், அந்த இறைச்சியை உண்ணும் மனித மனத்தையும் விலங்குதன்மை கொண்டதாக மாற்றுவதாகக் குறிப்பிட்டுள்ளார்.

சைவ உணவுகளை உண்டு, உடலைப் பாதுகாத்து ரஜோ, தமோ குணங்களிலிருந்து விலகி சத்வ குண மனிதராக ஆரோக்கியமாக, இன்பமாக வாழ்வோம்'' என்கிறார் திலகவதி.

**- அருணா. செந்தில்குமரன்**

படம் : **பொள்ளாச்சி சுந்தரம்**





# ஹிந்தி காப்பாற்றியது!



இந்தி ஒழிப்புப் போராட்டத்தின்போது எங்கள் கல்லூரி விடுதியில் தங்க முடியாததால், பாண்டிச்சேரியிலிருந்து எங்கள் ஊருக்குச் செல்ல முடிவெடுத்தேன்.

பாண்டிச்சேரி பஸ் ஸ்டாண்டில் ஒரு பஸ் விழுப்புரம் செல்ல நின்று கொண்டிருந்தது. அப்போது அங்கே வந்த வெறிபிடித்த கூட்டத்தைப் பார்த்து எல்லோரும் பஸ் ஸீட்க்கு அடியில் படுத்துக் கொண்டோம். கூட்டம் மின்சார விளக்கு, கம்பம் போன்றவற்றை நாசம் செய்துவிட்டுப் போய்விட்டது. நான் அந்த பஸ் மூலம் விழுப்புரம் வந்தேன். அங்கு எந்த பஸ் ஸும் இல்லை. வெறிச்சென்று இருந்தது. லாரி மூலம் திருச்சி வந்தேன். அங்கு ஒருவர் என்னைப் பார்த்து ஆங்கிலத்தில் "மதுரைக்குச் செல்ல வழி தெரியுமா?" என்றார். "தெரியும். நானும் அங்குதான் செல்ல வேண்டும். எப்படிப் போவது என்பதுதான் புரியவில்லை" என்றேன்.

உடனே அவர் "என்னுடன் மதுரைக்கு வாருங்கள். எனக்குத் தமிழ் தெரியாது. இந்திதான் தெரியும்" என்று கூறித் தமது மோட்டார் சைக்கிளில் ஏற்றிக்கொண்டார். அவர் உதவியுடன் மதுரை வந்து, என் கிராமத்துக்கு மாட்டு வண்டியில் வந்து சேர்ந்தேன். இந்தி எதிர்ப்புப் போராட்டத்தினால் தவித்த என்னைக் காப்பாற்றியவர் ஓர் இந்திக்காரர் ஒருவர் என்பதை எண்ணி நெகிழ்ந்து போனேன்.

- சுப்பு, சென்னை




## அடிதடி தேர்தல்!

கடந்த 1996 உள்ளாட்சித் தேர்தலில், எங்கள் கிராம சிற்றூராட்சித் தலைவர் பதவிக்குப் போட்டியிட்டுத் தேர்வானேன். என்னை எதிர்த்துப் போட்டியிட்டுத் தோற்ற இருவர் என் கிராம மக்களை அடிக்க ஆரம்பித்தனர். கிராமமே என் வீட்டின் முன்னால் கூடிவிட்டது. காவல் துறையில் புகார் செய்யப் புறப்பட்டோம். இரண்டு எல்லைகளிலும் இரண்டு வேட்பாளர்களின் அடியாட்கள் தடிகளோடு துரத்தினர். அப்போது எங்கள் ஊருக்குத் தொலைபேசி வந்திருக்கவில்லை. எப்படியோ என் ஆள் ஒருவர் ஆற்றில் இறங்கிக் கரை வழியாகப் போய் 13 கி.மீ. தொலைவிலுள்ள ஆரணி காவல் நிலையத்தில் புகார் தந்து, போலீஸ் வந்து அவர்களைப் பிடித்தது. தேர்தலில் போட்டியிடும் முன் அதன் சாதக, பாதகங்களை அலசி ஆராய்ந்து, யோசித்துச் செயல்படுவது நல்லது.

- பூ.சீனிவாசன், கல்பூண்டி

## கலைஞரின் சிலேடை!

ஒரு நிதியளிப்புக் கூட்டத்தில் பங்கேற்ற கலைஞர் கழகத் தொண்டர்களிடம், "வசூலான தொகை எவ்வளவு?" என்று கேட்க, "நாங்கள் எண்ணிக் கொண்டிருக்கிறோம்" என்று அவர்கள் கூறினார்கள். அதற்குக் கலைஞர், "நானும் எண்ணிக் கொண்டுதான் இருக்கிறேன். நேரமாகியும் இவ்வளவு தொகையை எண்ண முடியாமல் நீங்கள் திணறிக் கொண்டிருப்பதால், தொகை மிகவும் அதிகமாகவே இருக்கும் என எண்ணிக் கொண்டிருக்கிறேன்" என்று கூற, கூட்டத்தில் பலத்த சிரிப்பொலி!

- எஸ்.காயத்ரி, திருக்குறுங்குடி

# குறைந்த செலவில் குழந்தைப் பெற முக்கூட்டு மருத்துவம்!

இந்த உலகம் என்றென்றும் அழியாமல் நிலைத்திருக்க வேண்டுமானால் வாரிசுகள் பிறந்து கொண்டே இருக்க வேண்டும். ஆனால் திருமணமான சில தம்பதியரில் தனது ஆஸ்தியை ஆளவும், தனது பரம்பரை வம்சத்தை இனவிருத்தி செய்யவும், பெற்றோரைக் காப்பாற்றவும், கடைசி காலத்தில் ஈமக் கிரியைகள் செய்யவும் தங்களுக்குக் குழந்தைகள் பிறக்கவில்லையே என்று ஏங்கி கண்ணீரோடு கோயில் குளங்களை சுற்றிக் கொண்டும், மந்திர தந்திரங்களில் ஈடுபட்டும், தாயத்துக்களை கட்டிக் கொண்டும், அரச மரத்தையும் - வேப்ப மரத்தையும் சுற்றிக் கொண்டும் சிலர் நரபலி கொடுத்துக் கொண்டும், வயோதிக காலம் வரை தங்களது வாழ்நாளை வீணாக்கிக் கொள்ளுகிறார்கள். அதோடும் இல்லாமல் பெண்கள் மலடி என்ற பட்டத்துடன் வாழ்ந்து வருகிறார்கள். இதனால் கணவராலும், உறவினராலும் வெறுக்கப்பட்டு, ஒதுக்கப்படுகிறார்கள். சிலர் தற்கொலை முயற்சியிலும் ஈடுபடுகிறார்கள்.

இவர்களின் துன்பங்களைப் போக்க திருவண்ணாமலை மாவட்டம் **வந்தவாசியிலும், சென்னை வடபழனி 100அடி சாலையிலும் 'நவீன வைத்தியாலயா'** என்ற ஆஸ்பத்திரி நடத்தி வரும் 'மருத்துவ திலகம்' **டாக்டர் A. அர்ஜுனா, டாக்டர் V. A. ஆண்டாள் அர்ஜுனா, டாக்டர் M. A. சரவணன்** ஆகிய மூவரும் **ஹோமியோ - சித்த - ஆயுர்வேத முக்கூட்டு மருத்துவ சிகிச்சையில் குழந்தை பாக்கியம் உண்டாக்கித் தருகிறார்கள்.**

"எங்களிடம் சிகிச்சைக்கு வரும் கணவன் - மனைவி தம்பதியரை பரிசோதித்து பார்த்ததில் ஆண்களுக்கு 60 முதல் 70 சதவிகித குறைபாடும், பெண்களுக்கு 30 சதவிகித குறைபாடும், இருப்பது தெரிய வருகிறது. அதனால் குழந்தை பெறுவதில் கணவன் - மனைவி இருவருமே பொறுமையுடன் பொறுப்புடன் சிகிச்சை பெற முன்வர வேண்டும்.

சில ஆண்களுக்கு சிற்றின்பத்தில் நாட்டம் இல்லாமல் இருப்பதாலும் ஆண்மை அழிந்திருப்பதாலும், உயிரணு உற்பத்தி அறவே இல்லாமையாலும் சிலருக்கு உயிர் அணுக்கள் உற்பத்தி குறைவாகவே இருப்பதாலும், அம்மை நோயினாலும், புட்டாளம்மையாலும், மஞ்சள் காமாலையாலும், டைபாய்டு ஜுரத்தாலும், முறையற்ற செக்ஸ் பழக்க வழக்கங்களாலும் உயிரணு உற்பத்தி பாதிக்கப்படுகிறது. இதை முக்கூட்டு மருத்துவத்தால் சிகிச்சையளித்து குழந்தை பிறக்கச் செய்கிறோம்.



**• உயிரணு உற்பத்தி ஆகியும், கருக்குழாயில் அடைப்பு நீங்கியும் - ஆண் குழந்தைகள் பெற்ற செஞ்சியைச் சேர்ந்த தமிழரசி முருகன்.**

பெண்களுக்கும் பல குறைபாடுகள் இருக்கிறது. மாதவிடாய் கோளாறுகள், கருப்பை ஓவரிகள் வளர்ச்சியின்மை, கருப்பை ஓவரிகளில் கட்டிகள், கருமுட்டை உண்டாகாதிருத்தல், கருக் குழாயில் சதை அடைப்பு ஏற்பட்டிருத்தல், கருமுட்டை வெடிக்காமலிருத்தல் - சிற்றின்பத்தில் சில பெண்களுக்கு நாட்டம் உண்டாகாமலிருத்தல் போன்ற காரணங்களை முக்கூட்டு மருத்துவ சிகிச்சை அளித்து நீக்கி குழந்தை பிறக்கச் செய்கிறோம்.

திருவண்ணாமலை மாவட்டம் சாத்தனூர் அணையில் கீதா - சுப்பிரமணி தம்பதியர் முக்கூட்டு சிகிச்சையால் ஆண் குழந்தை பெற்றுள்ளார்கள்.

பெங்களூர் சிவாஜி நகரில் ராமு தம்பதியருக்கு 20 ஆண்டு குழந்தை இல்லாமல் இருந்து உயிரணு உற்பத்தி ஆகி முக்கூட்டு சிகிச்சையில் ஆண் குழந்தை பெற்றுள்ளார்கள்.

துபாயில் முருகன் - வள்ளி தம்பதியருக்கு உயிரணு உற்பத்தி அதிகரித்தும், கருக் குழாய் அடைப்பு நீங்கியும் ஆண் குழந்தை பெற்றுள்ளார்கள்.

கோயம்புத்தூர் ஆர்.எஸ்.புரத்தில் அறவே உயிரணு உற்பத்தி இல்லாத மகேஷ் என்பவருக்கு எங்கள் சிகிச்சையில் 110 மில்லியன் கவுண்ட்டும், 20% மொட்டிலிட்டியும் (உயிரணு) உற்பத்தி ஆகியுள்ளது. இது ஒரு பெரிய சாதனை.

திருச்சி மாணிக்கவேல் என்பவருக்கு உயிரணு உற்பத்தி அறவே இல்லாதிருந்து தற்போது (கவுண்ட்) 110 மில்லியனும், 60% மொட்டிலிட்டியும் உற்பத்தி ஆகியுள்ளது.

உலகின் பல நாடுகளிலிருந்து வந்தும், இந்தியாவில் பல மாநிலங்களிலிருந்து வந்தும் எங்கள் நவீன வைத்தியாலயாவில் ஹோமியோ - சித்த - ஆயுர்வேத முக்கூட்டு சிகிச்சை பெற்று குழந்தை பாக்கியத்துடன் வாழ்ந்து வருகிறார்கள். பலர் தற்போது சிகிச்சை பெற்று வருகிறார்கள். நூற்றுக்கு தொண்ணூறு சதவிகிதம் பேர் குழந்தை பெற்றுக் கொள்ளுகிறார்கள். நீங்களும் குறைந்த செலவில் குழந்தை பெற வேண்டுமானால் எங்களை உடனே சந்திக்கவும்" என்று அழைக்கிறார்கள்.



டாக்டர்
M.A.சரவணன்
B.H.M.S.



மருத்துவ திலகம்
டாக்டர் A. அர்ஜுனா,
டாக்டர் V. A. ஆண்டாள் அர்ஜுனா

## நவீன வைத்தியாலயா

**ஹோமியோபதி-சித்தா-ஆயுர்வேத மலடு நீக்கும் ஆஸ்பத்திரி**

**சென்னையில் :** சனி, ஞாயிறு, திங்கள் ஆகிய நாட்களில் டாக்டர்களை சந்திக்கும் இடம்: பழைய எண் : 9, புதிய எண் : 65, 100 அடி ரிங் ரோடு, வடபழனி, (கவுரிசங்கர் திருமண மண்டபம் எதிரில் - போக்குவரத்து சிக்னல் பக்கத்தில்). சென்னை - 600 026.
**போன் : 044-23623464**

வந்தவாசியில்: செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி ஆகிய நாட்களில் டாக்டர்களை சந்திக்கலாம்.
நெ. 27, பிராமணர் தெரு, வந்தவாசி - 604 408, திருவண்ணாமலை மாவட்டம் போன் : 04183 - 225208, 228077 செல்: 94430 - 36522, 93444 - 30952

web: www.naveenainfertilityhospital.com
E-mail: drarjuna@naveenainfertilityhospital.com

Advt.

## தொடர்கதை

# சங்கடம்!

**13**

குமரன் காபி டம்ளரை வைத்து விட்டு எழுந்துகொண்டதும், டீப்பாய் மேல் வைத்திருந்த கல்யாணப் பத்திரிகைகளைக் கையில் எடுத்துக்கொண்டு பத்ரியும் எழுந்தான்.

எதிரில் புன்முறுவலோடு நின்ற நபருக்குக் கைகூப்பிய குமரன், "புறப்படறோங்க. குடும்பத்தோட அவசியம் வரணும்" என்றான்.

"கண்டிப்பா வர்றோம்."

இருவரும் வெளியே வந்து காரில் ஏறியதும் பத்ரி, "அடுத்த தெருவிலேயே ஒரு அட்ரஸ் இருக்கு. அதைக் குடுத்துட்டா அப்புறம் சீனிவாசா நகர் போயிடலாம்" என்றான்.

காரை செலுத்திக் கொண்டிருந்த குமரன், "நேத்து மஞ்சரி போன் செஞ்சு பேசினா, பத்ரி" என்றான்.

"அட! பரவால்லயே... அந்தளவுக்கு முன்னேற்றமா?"

"அவ ஒரு கேள்வி கேட்டா, மனசு உறுத்துது. பொய்தான் சொல்ல வேண்டியிருந்துச்சு."

"அப்படி என்ன கேட்டாங்க?"

"கொஞ்சம் சகஜமா பல விஷயங்கள் பேசினேன். அப்ப அவ ஸ்கூல்ல படிச்சப்போ ஒரு பையன் லவ் லெட்டர் எழுதி, அதை நாலா மடக்கி இவளோட ஜாமெண்ட்ரி பாக்ஸ்ல வெச்சிட்டானாம். அதுல 'மஞ்சரி, எனக்கு முத்தா கொடுப்பியா'ன்னு தப்பும் தவறுமா எழுதியிருந்திச்சாம். சார்கிட்ட கொடுத்துட்டாளாம்."

"இன்ட்ரஸ்ட்டிங், அப்புறம்?"

"சார் எல்லாரையும் எந்திரிக்கச் சொல்லி 'எவன்டா இப்படி எழுதினது'ன்னு கேட்டதுக்கு, பசங்க எவனுமே பதில் சொல்லலையாம். ஒவ்வொருத்தனா வரச்சொல்லி அதே மாதிரி ஒரு நோட்டுல எழுதச் சொன்னாராம். அப்படியும் அவரால கண்டுபிடிக்க முடியாமப் போயி எல்லாருக்கும் ஒரு பிரம்படி குடுத்தாராம்"

"பாவமே!"

"கடைசி வரைக்கும் அது யார் செஞ்ச வேலைன்னு இவளுக்குத் தெரியவேயில்லைன்னு சொன்னா."

"சரி, இதுல உன் மனசுக்கு என்ன உறுத்தல், குமரன்?"

"இந்த மாதிரி உங்க ஸ்கூல்லயோ, காலேஜ்லயோ உங்களுக்கு ஏதாச்சும் சுவாரஸ்யமான சம்பவம் நடந்திருக்கான்னு கேட்டா. நான் என்ன பதில் சொல்றது? எனக்கு நிஜமான, ஆத்மார்த்தமான ஒரு காதல் அனுபவமே உண்டுன்னு உண்மையைச் சொல்ல முடியலையே, பத்ரி! அது உறுத்தல்தானே?"

"இதுக்கு நான் என்ன பதில் சொல்றதுன்னு தெரியலை குமரன்" என்று பத்ரி சொன்னபோது குமரனின் செல்போன் ஒலித்தது.

காரை சாலையின் ஓரமாக நிறுத்தி விட்டு போனை எடுத்துப் பெயரைப் பார்த்துத் தயங்கினான். பிறகு காதில் வைத்தான்.

"ஹலோ பூஜா. எப்படி இருக்கே?"

"நல்லா இருக்கேன்னு சொல்ல முடியலை, குமரன்."

'பூஜா' என்று இவன் சொன்னதும் காரை விட்டு இறங்க எத்தனித்த பத்ரியை, வேண்டாமென்று சைகை செய்து தடுத்தான் குமரன். போனில் தொடர்ந்தான்.

"என்ன, சொல்லு!"

"குமரன், வந்து... நான் உன்னைச் சந்திக்கணும். சந்திக்க முடியுமா?"



"ஏதாச்சும் பிரச்னையா பூஜா?"

"ஆமாம்."

"என்ன பிரச்னை?"

"போன்ல பேசி முடிச்சிட முடியாது, குமரன்."

"சரி. அவசரமா?"

"ஆமாம். தொந்தரவு பண்றேன்னு தெரியுது. ஆனா... என் நிலைமை அப்படி! ப்ளீஸ்... நாளைக்கு நான் பாண்டிச்சேரி வரட்டுமா? எத்தனை மணிக்கு, எங்க வரணும்னு சொன்னா..."

"பூஜா... நாளைக்கு அப்பா, அம்மாவோட மயிலாடுதுறைக்குப் போறேன். பக்கத்துல ஒரு கிராமத்துல எங்க குல தெய்வத்தோட கோயில் இருக்கு. அங்க கல்யாணப் பத்திரிகை வெச்சிட்டு வரணும்."

"மை காட்! நான் அதை மறந்தே போய்ட்டேன். குமரன், உனக்கு என்னிக்குக் கல்யாணம்?"

"வர்ற வெள்ளிக்கிழமை."

"இன்னிக்கு செவ்வாய். நடுவுல ரெண்டு நாள்தான் இருக்கு. கல்யாணம்னா எவ்வளவு கவலை இருக்கும்! ஸாரி, உன் சூழ்நிலை புரியாம தப்பான சமயத்துல போன் செஞ்சிட்டேன். நான் போன் செஞ்சதை மறந்துடு குமரன். வெச்சிடறேன்."

"இரு பூஜா. பிரச்னைன்னு சொன்னே. அவசரம்னு சொன்னே. எந்த உதவி வேணாலும் உனக்கு நான் செய்றேன்னு நேர்ல நான் சொன்னது வெறும் வார்த்தை இல்லை. எனக்கு சென்னைல சில பேருக்குப் பத்திரிகை வைக்கணும். கொரியர்ல அனுப்பிடலாம்னு இருந்தேன். ப்ளானை மாத்திக்கிறேன். இன்னும் அரை மணி நேரத்துல நான் புறப்பட்டாலும் அடுத்த ரெண்டு மணி நேரத்துல என்னால அங்கே இருக்க முடியும்."

"அய்யோ! பாவம்... எனக்காக வர வேணாம், குமரன்."

"உனக்காக மட்டும் வரலை, பூஜா. உனக்காக மட்டும் வந்தாலும் தப்பில்லை.

பட்டுக்கோட்டை பிரபாகர்

பழகின மனுஷியை திடீர்னு பெட்ஷீட் உதர்ற மாதிரி உதறிட முடியாது. உன் வீட்டுக்கு வரட்டுமா?"

"வேணாம்; வெளிலதான் சந்திக்கணும்."

"பீச்?"

"அங்க வேணாம்."

"அப்போ டிரைவ்-இன் ஹோட்டல்?"

"சரி. நீங்க சென்னைக்குள்ளே வந்ததும் போன் செய்ங்க. அடுத்த அரை மணி நேரத்தில டிரைவ்-இன்ல சந்திக்கலாம். தேங்க் யூ, குமரன்."

"சொல்லணும்னு அவசியமில்லை."

போனை அணைத்த குமரன், காரின் இன்ஜினையும் அணைத்தான். பத்ரியைத் திரும்பிப் பார்த்தான்; பெருமூச்சு விட்டான்.

"பத்ரி, பூஜாவுக்கு ஏதோ பிரச்னை. உடனே சந்திக்கணும்னு சொல்றா. என்னால மறுக்க முடியலை. போய்ட்டு வந்துடலாமா?"

"நான் எதுக்கு?"

"பரவாயில்லை பத்ரி. அறிமுகப் படுத்தறேன். உனக்குத்தான் எல்லா விஷயத்தையும் சொல்லியிருக்கேனே... எனக்கும் ஒரு துணை வேணும்."

"போக, வர ஒரு துணை வேணும்; நியாயம். ஆனா நீங்க ரெண்டு பேரும் சந்திக்கிறப்போ நான் வேணாமே. அந்தப் பொண்ணு சங்கடமா ஃபீல் பண்ணும்."

"பாத்துக்கலாம். அப்போ... வீட்டுக்குப் போய்ட்டுத் தகவல் சொல்லிட்டுப் புறப்படலாமா?"

"குமரன், எனக்கு உன்னைப் புரிஞ்சிக்க முடியலை."

"ஏன்?"

"ஒவ்வொரு நேரமும் ஒரு தீர்மானத்தில இருக்கறது சரியில்லை. பூஜாவை மறுபடி சந்திக்கிறதுக்கு முன்னாடி மஞ்சரியைக் கல்யாணம் செய்துக்க சம்மதிச்சே. பூஜாவைச் சந்திச்ச அவ திருமணம் தோல்வில முடிஞ்சதைத் தெரிஞ்சிக்கிட்டதும் தடுமாறினே. இந்தக் கல்யாணத்தை நிறுத்திட்டு அவளையே கல்யாணம் பண்ணிக்கலாமான்னு துடிச்சே. அப்புறம் நிதானத்துக்கு வந்தே. மஞ்சரியை நேர்ல சந்திச்சு மனசு விட்டுப் பேசினதும் இந்தக் கல்யாணம் நல்லது தான்னு முடிவுக்கு வந்தே. இப்ப என்னடான்னா பூஜா போன் செஞ்சதுமே புறப்படத் தயாராகறே! ஏன் இந்தத் தடுமாற்றம்?"

"இது தடுமாற்றம் இல்லை, பத்ரி. மஞ்சரியோடதான் கல்யாணம்! அதுல மனசு செட்டாயிடுச்சு. அதுக்காக போகிக்குப் பழசை எரிக்கற மாதிரி பூஜாவோட நினைவுகளைச் சட்டுன்னு தூக்கிப் போட்டு எரிச்சிட முடியாது. மனப்பூர்வமா காதலிச்சேன் பத்ரி. அதனாலதான் அவ என்னை சந்தேகப்பட்டு விலகி, இன்னொருத்தனுக்குக் கழுத்தை நீட்டினதுக்கப்புறமும் அவளை என்னால மன்னிக்க முடியுது. இன்னிக்கு பூஜா என் நெருக்கமான தோழி! ஒரு பத்ரி மாதிரி. அவளுக்கு ஒரு பிரச்னைங்கறப்போ உடனே உதவணும்னு தோணுது.

> **"ஏன் அவர் ரொம்ப நேரமா தேம்பித் தேம்பி அழுதுக்கிட்டிருக்காரு?"**
>
> **"அவர் அனுப்புன 'சிரிப்பு' அத்தனையும் திரும்பி வந்திடுச்சாம்!"**
>
> **- இனாம் மணியாச்சி கேசவன்**



தப்பா?"

"இப்ப சொன்னியே, தோழின்னு.... இதை அழுத்தமா மனசுல பதிய வெச்சுக்கோ. நீ தெளிவா இருந்தா எனக்குச் சந்தோஷம்தான்" என்றான் பத்ரி.

பூஜா புடைவை மாற்றிக் கொண்டாள். தலைப்பை தோளில் பின் செய்து கொண்டாள். கூந்தலை கிளிப் விடுவித்துப் படிய வாரி, மீண்டும் கிளிப் பொருத்திக் கொண்டாள். ஆர்வமில்லாமல் முகத்தில் லேசாகப் பவுடரை ஒற்றிக் கொண்டு, ஸ்டிக்கர் பொட்டு ஒட்டிக் கொண்டாள்.

கைப்பையை எடுத்துக்கொண்டு, வீட்டைப் பூட்டிக்கொண்டு கீழே இறங்கியபோது செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருந்த வீட்டுக்கார அம்மாள், "பூஜா... ஒரு நிமிஷம்... உங்கிட்ட

பேசணும்" என்று பூவாளியை வைத்து விட்டு அவனை வீட்டின் வரவேற்பறைக்கு அழைத்துச் சென்று அமரச் சொன்னாள்.

"என்னம்மா?" என்றாள் பூஜா.

சில விநாடிகள் அமைதியாக இருந்து விட்டு, "இத பாரும்மா, நீ வீட்டைக் காலி செஞ்சிடு!" என்றாள் அவள்.

"ஏன் இப்படி திடீர்னு..."

"நீ வாடகைக்குக் கேட்டப்பவே எனக்குப் பொய் பிடிக்காதுன்னு சொன்னேன். வீட்டுக்காரர் வெளியூர்ல இருக்கார். சீக்கிரமே வந்துடுவார்னு சொன்னே. நேத்து நான் ஊர்ல இல்லை. இங்க போலீஸ் எல்லாம் வந்துச்சாமே. உன் புருஷனோட பிரச்னையாகி, தனியா வந்துட்டியாமே.."



"ஆமாம். ஆனா... வந்து.. விவரமா சொன்னா என் பக்கத்துல உள்ள நியாயத்தை உங்களால புரிஞ்சுக்க முடியும்மா."

"அதெல்லாம் எனக்கு வேணாம். இன்னும் என்னென்ன மறைச்சியோ தெரியலை. எனக்குப் பிடிக்கலை. நீ காலி பண்ணிடு."

"திடீர்னு சொன்னா எப்படீங்க?"

"திடீர்னுதானே போலீஸ் வந்துச்சு?"

"அது என் குடும்ப விஷயங்க."

"காலி பண்ணிடு! இதமா சொல்றப்பவே செஞ்சிடு."

"என்னங்க ஆள் ஆளுக்கு மிரட்டறீங்க? இப்ப என்ன தப்பு நடந்திச்சி? அக்ரிமெண்ட்ல கையெழுத்துப் போட்டிருக்கோம் ரெண்டு பேரும். காலி பண்ணச் சொன்னா மூணு மாசம் அவகாசம் குடுக்கணும். புரிஞ்சுதா? மூணு மாசத்துல காலி செஞ்சிடறேன்."

படபடவென்று கொதிப்பாகப் பேசி விட்டு வேகமாக எழுந்து வெளியே வந்த பூஜா தமது ஸ்கூட்டியை ஸ்டார்ட் செய்து ஹெல்மெட் அணிந்தாள், புறப்பட்டாள்.

டிரைவ்-இன் ஹோட்டலுக்கு வந்து வண்டியை நிறுத்திவிட்டு ஆங்காங்கே நின்றிருக்கும் கார்களுக்கு நடுவில் குமரனைத் தேடினாள்.

கையசைத்து வரச் சொல்லி சைகை செய்தான் குமரன்.

அவனிடம் வந்தாள். அருகில் நிற்கும் பத்ரியைப் பார்த்தாள்.

"பூஜா, இது பத்ரி. என் ஃப்ரெண்ட். நம்ம காலேஜ்தானாம். நமக்கு ஜூனியர். நம்ம விஷயம் எல்லாம் பத்ரிக்குத் தெரியும்."

"ஹலோ" என்றாள் பூஜா.

"ஹலோ" என்றான் பத்ரி, "நீங்க பேசிட்டிருங்க. என் செல்போனுக்கு ரீசார்ஜ் பண்ணணும். பண்ணிட்டு வந்துடறேன்" என்று விலகிச் சென்றான்.

"உக்காரு" என்று காரின் முன் கதவைத் திறந்தான். அவள் அமர்ந்ததும் டிரைவிங் சீட்டில் அமர்ந்தான் குமரன்.

வந்த சப்ளையரிடம் அவளைக் கேட்டுக் கொண்டு ஆர்டர் செய்து அனுப்பி விட்டு காரில் ஓடிக்கொண்டிருந்த மியூசிக்கை நிறுத்தினான்.

"சொல்லு பூஜா. நான் என்ன செய்யணும்?"

"குமரன்.. உன்னை உதவி கேக்கறதுக்கு எனக்கு உரிமையே இல்லை. அந்த அருகதையை நான் எப்பவோ இழந்துட்டேன். ஆனா என் அப்பா என்னைக் கை விட்டுட்டதால இந்த நெருக்கடியான சூழ்நிலைல எனக்கு உன்னை விட்டா வேற யாருமே இல்லை!"

"சொல்லு பூஜா. என்ன வேணும் உனக்கு?"

"காசு குடுத்தா கச்சிதமா கொலை செய்ற ரவுடி யாரையாவது உனக்குத் தெரியுமா குமரன்?" என்றாள் பூஜா.

(தொடரும்)

# ஜாலி போட்டி-2

பரிசு ரூ.2,000









இந்த வீடு டெல்லியில் குடியிருக்கும் இந்த மூன்று தமிழக மத்திய அமைச்சர்களில் ஒருவருடைய வீடு. அது யாருடையது? என்று சரியாகக் கண்டுபிடித்து அஞ்சலட்டையில் எழுதி அனுப்புங்க. அதோடு கல்கி பற்றி நச்சுன்னு இரண்டு வரியில் அசத்தலான ஒரு வாசகம் எழுதி அனுப்புங்க. இரண்டாயிரம் ரூபாயை பரிசாக வெல்லுங்கள்! நிறைய பேர் சரியான விடை எழுதினால் குலுக்கல் மூலமும் 'நச்' வாசக அடிப்படையிலும் எட்டு பேர் தேர்ந்தெடுக்கப்பட்டு பரிசுகள் பகிர்ந்தளிக்கப்படும்.

முடிவு தேதி
30.10.2006

*சீக்கிரம் அனுப்புங்க!*

குத்துக்காலிட்டு அமர்ந்த
முப்பாட்டனின் பிருஷ்டங்களும் பாதங்களும்
மண்ணோடு பேசிய ரகசியம்
என்னவாயிருக்கு?

மண்ணின் ரகசியம் சொல்லும்
ஒலி பெருக்கிகளாய்ப் பூக்கள்

மண்ணெடுத்துப் பல்துலக்கிய பாட்டிக்கு
மண் அரைத்து ஊற்றித்தான்
உயிர் பிரிந்ததாம்.

மண் தரையின் சாணவாசம்
இன்றும்
அப்பிக் கிடக்கும் அடிமனசில்

துளைக்கும் வேர்களுக்கும்
நீர் கொடுக்கும் நெஞ்சமாய்
நிலம்.

சப்பி எறிந்த கொட்டையைக் கூட
மரமாய் வளர்க்கும்
மண்.

மண்ணின் பேச்சு
புல்லில் பனித்துளி

மசக்கையில் மண் தின்னும்
பெண் அறிவாளோ
மண்ணின் மொழி?

மண்ணைத் தீண்டவிடாமல் தடுக்கும்
மிதியடி தாண்டி
மண்ணுக்குள் புதைவெதெப்போ
மனசு?

# மண்

நா.வே.அருள்



அனந்தபத்மநாபன்

# அருள்வாக்கு



# லஞ்சம்

மனுஷ்ய சுபாவத்தைப் பார்த்தால் சொத்து, சுதந்திரம் உள்ளவன்தான் லஞ்சம் வாங்குகிற வாய்ப்பு குறைச்சல். இப்படி நான் சொன்னால் நீங்கள் ஒப்புக் கொள்ளாமல் சண்டைக்கு வரலாம். பேர் பேராக ஆசாமிகளைக் காட்டி, 'லக்ஷம், பத்து லக்ஷம் என்று சேர்ந்த பிற்பாடும் இவர்களெல்லாம் இரண்டு கைகளாலும் வாங்கிக்கொண்டே இருக்கிறார்களே!' என்று கேட்கலாம். ஆனாலும் இப்படி வாழ்க்கையே பணம்தான் என்று பணத்துக்காகப் பறக்கிற போக்கு நம்மிடையே ஏற்பட்டது சமீப காலத்தில்தான்! ஆத்ம சம்பத்து தேய்ந்துகொண்டே வந்து, அதே சமயத்தில் நூதன நூதனமாக போகப் பொருள்கள் கடைக்கு வருவதாகவும், பேப்பர் ரூபாயென்றும், அதை லக்ஷம், கோடி என்று பாங்க் என்பதாக ஒன்றில் எவ்வளவு வேண்டுமானால் போட்டு வைக்கலாம் என்றும் ஏற்பட்ட பிற்பாடுதான் நம் ஜனங்களுக்குப் பணமே குறி, பணம் சேர்ப்பதே வாழ்க்கை லக்ஷியம் என்று ஆனது. இதற்கு முந்தி, போக வஸ்துக்களுக்கு ஓர் அளவு இருந்த வரையில், இருந்த வஸ்துக்களின் அநுபோகத்தையும் கட்டுப்படுத்தும் சாஸ்த்ரங்களில் பொதுவாக ஜனங்களுக்கு பயம் இருந்தவரையில், பாங்கில் சர்வ ஜாக்ரதையாக எத்தனை வேண்டுமானால் போட்டு வைத்துக் கொள்ள இடம் இல்லாத வரையில், நம்முடைய மக்களுக்குப் பணத்தில் இத்தனை ஆசை இருக்கவில்லை. அதனால் பணக்காரர்கள் லஞ்சம் வாங்கும் வாய்ப்பு அப்போது ரொம்பக் குறைவுதான். சமத்துவம் என்று சொல்லிக் கொண்டு நடைமுறை உண்மைகளை மறந்து தர்மத்துக்கும் நீதிக்கும் ஹானி செய்வது உசிதமன்று.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்



# லாபம் கொழிக்கும் விவசாயம்!

ஒன்றரை ஏக்கர் தென்னந்தோப்புக்குள் ஊடுபயிராக என்னென்ன பயிரிடலாம்? அதிகபட்சம் நாலைந்து ஐட்டங்கள்? ஆனால் பணம் கொட்டும் மா, கால்நடைகளுக்குப் பயன்படும் க்யூபா நாட்டுப் புல் வகையான கூபா, ஐஸ்கிரீமில் பயன்படும் வெனிலா கொடி, சித்த மருத்துவச் செடியான பூனைக்காலி, மிளகுக் கொடிகள், கிளுவைச் செடிகள், தேக்கு மரங்கள் பலா, கொய்யா, சப்போட்டா, கறிவேப்பிலை, காபிச் செடிகள் என்று பலவற்றையும் விவசாயம் செய்து அசத்தி வருகிறார் பட்டுக்கோட்டை, பிச்சினிக்காடு விவசாயி கே.கே.ஆர். லெனின்.

"எங்க பூமி நன்செய் நிலம்தான். ஆனா கடந்த முப்பது வருஷமா காவிரி நீர் தேவைக்கேற்ப வராத தால நெல் சாகுபடியிலிருந்து தென்னைக்கு மாறிட்டேன். ஒன்றரை ஏக்கர் நிலத்துல நூற்றுப்பத்து தென்னம்பிள்ளைகளை வச்சேன். பதினைந்து ஆண்டுகள் கழிச்சு அதைத் தென்னை நாற்றங்காலாக மாற்றிக்கொண்டேன். வருடத்துக்குச் சுமார் ஏழாயிரம் தென்னைக் கன்றுகளை உற்பத்தி செய்து விற்கிறேன். நோய்வாய்ப்படும் நாற்றுகளுக்கு இயற்கை வேளாண் மருந்துகளைத்தான் பயன்படுத்துறேன்" என்கிறார் இந்த அதிசய விவசாயி லெனின்.

தென்னந்தோப்பினிடையே இப்படி இவர் பல வகை மரம், செடி கொடிகளை பயிரிட்டிருப்பது பார்ப்பவரைப் பிரமிக்க வைக்கின்றது.

விவசாயிகளுக்கும், விவசாய மாணவர்களுக்கும் லெனினின் தென்னந்தோப்பு ஒரு பொக்கிஷம்!

செய்தி. படம் :

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# நின்னையேச்

"பேனா, பென்சில், ரப்பர் எடுத்துக்கிட்டியா? ஹால் டிக்கெட் பத்திரமா வச்சருக்கியா?'' தேர்வுக்குக் கிளம்பும் நம் பிள்ளைகளை நோக்கி அடுத்து நாம் கேட்கும் முக்கியமான கேள்வி 'சாமி கும்பிட்டியா?' என்பது தான்.

எவ்வளவு நன்றாகப் படித்துத் தயார் செய்திருந்தாலும் கடவுள் துணை வேண்டும் என்பது நமது சம்பிரதாயம் மட்டுமன்று, மனத்தின் ஆழமான நம்பிக்கையும்கூட!

'பரீட்சைக்குப் போகுமுன் நீங்கள் எப்படி, என்ன வேண்டிக் கொண்டு செல்வீர்கள்?' என்ற கேள்விக்கு சென்னை, கே.கே.நகர் அன்னை வேளாங்கண்ணி மெட்ரிக்குலேஷன் பள்ளி மாணவிகளின் பதில்கள்...

"எங்க வீட்டில் எல்லோரும் முருகனைத்தான் வழிபடுவார்கள். இருந்தாலும் பரீட்சைக்குப் போகும் போதோ, விடைத்தாளை வாங்கும் போது நான் மனத்துக்குள் வேண்டிக் கொள்வது கல்விக் கடவுளான சரஸ்வதியைத்தான்.

விடைத்தாளில் பேனாவை வைப்பதற்கு முன்பு சரஸ்வதியை மனத்துக்குள் நினைத்து, 'கரக வஸந்த லக்ஷ்மி' என்ற ஆரம்பிக்கும் ஒரு சுலோகத்தைச் சொல்லி விட்டுத்தான் எழுதவே ஆரம்பிப்பேன்'' என்கிற பன்னிரண்டாம் வகுப்பு மாணவி கார்த்திகாவுக்கு இந்தப் பழக்கம் இரண்டாம் வகுப்பிலிருந்தே இருந்து வருகிறதாம்.

"என்னோட இரண்டாம் வகுப்பு வசந்தா மிஸ்தான் இந்த மந்திரத்தைச் சொல்வதற்குக் கற்றுத் தந்தாங்க.

என்னதான் பரீட்சைக்கு விழுந்து விழுந்து படிச்சு, ரெடியா இருந்தாலும் கடவுள் துணைங்கிறது ரொம்ப முக்கியம். அதுலயும் கல்விக் கடவுளான சரஸ்வதியோட துணை இருந்தா தயக்கமில்லாம, குழப்பம் இல்லாம பரீட்சை எழுதி நல்ல மார்க் வாங்கலாம்ங்கிறது என்னோட நம்பிக்கை. முயற்சி 90%, கடவுள் நம்பிக்கை 10%'' என்கிறார் கார்த்திகா!

• சரஸ்வதி என் சாய்ஸ்!



குரானில் உள்ள 'கரா' என்கிற மந்திரத்தோடுதான் ஹமீதா ஃபாத்திமா தேர்வை எழுதத் தொடங்குவாராம். 'அது என்ன கரா மந்திரம், விவரமாகக் கூறுங்களேன்...?' என்றதற்கு,

''குரானில் இருக்கிற மந்திரம்; எல்லாவற்றையும் நமக்கு அளிக்கக் கூடிய வெற்றி மந்திரம்!

அம்மா எனக்குச் சொல்லித் தந்த 'கராவை' மனத்துக்குள் சொல்லி வணங்கி விட்டுத்தான் நான் எழுதவே ஆரம்பிப்பேன்.

'இஸாஜதா நஸ்ருல்லாயி' என்று தொடங்கும் கரா பரீட்சைன்னு இல்லை. விளையாட்டு, போட்டி எதுவானாலும் இந்தக் குரான் மந்திரங்கள் வெற்றியைக் கொடுக்கும்ங்கிறதுல நான் நம்பிக்கையா இருக்கேன்.





• அருளுங்கள் ஆண்டவரே!

சாலும் கடவுளோட சப்போர்ட் நிச்சயம் வேணும். 'நல்ல ஞானம் வேண்டும் ஆண்டவரே! சாலமோனுக்குக் கிடைத்த ஞானம்போல, அவருக்கு நீர் அளித்தது போல எமக்கும் நீர் அருளுவாயாக!' எனது விடைத்தாளைத் திருத்தும்போது ஆசிரியர் கண்களிலிருந்து எனக்கான தயவு கிடைக்கட்டும். எனது வெற்றி நல் வெற்றியாக அமையட்டும்.' என்பதுதான், என் பிரார்த்தனை'' என்கிற குளோரா,

''படிப்புங்கிறது நாம படிக்கிற, மெமரியில் வெச்சுக்கிற விஷயம். அதோட ஆண்டவரின் கிருபையும், நிச்சயம் வின் பண்ணலாம்'' என்

# சரணடைந்தேன்...

என்னைக் கேட்டா, எண்பது சதவிகிதம் படிப்பு, இருபது சதவீதம் கடவுள் நம்பிக்கைனு சொல்வேன்'' என்கிறார் ஹமீதா.

''படித்த கேள்விகள் பரீட்சையில் வரணும், படித்தது மறந்துவிடக் கூடாது, நிறைய மார்க் வாங்கணும்... இதுதான் எப்பவும் என்னோட எண்ணம்.

எவ்வளவுதான் நாம நல்லா படிச்

இறார்.

என்னதான் நன்றாகத் தயார் செய்து பரீட்சைக்குப் போனாலும் இறையருள் இல்லாமல் நமது விடைத்தாளைச் சரியாக, முழுசாக நிரப்ப முடியாது என்று மூவருமே சொல்கிறார்கள்!

• கராவே வெற்றி!



- மலரவன்

படங்கள்: பொள்ளாச்சி சுந்தரம்

# தொழில்

"மருந்துலகத்தின் சிறந்த கம்பெனியான MERCK, ஒரு புதிய அணுகுமுறையைக் கொண்டு வந்தது. கம்பெனியின் ரெப்ரசன்டேட்டிவ்கள் மருத்துவரை அணுகி மருந்தின் சிறப்புகளை மட்டுமல்லாமல், அதனால் வரக்கூடிய குறைபாடுகளையும் கூற வேண்டும். மருந்து பற்றிய பட்டியலில் இடம் பெற்றுள்ள தன்மையைத் தவிர்த்து எந்த ஒரு விஷயத்தையும் கூடுதலாகப் பேசக் கூடாது. ஒவ்வொரு மருத்துவரிடமும் உரையாடுகையில், கண்டிப்பாக அது டேப்பில் பதிவு செய்யப்பட வேண்டும். இதுபோன்ற அணுகுமுறைகள்தான் MERCK முதலிடம் பெறுவதற்குக் காரணங்களாக அமைந்தன" என்கிறார் மிராஸிஸ் நெடுமாறன்.

"அணுகுமுறைதான் எந்த ஒரு செயலுக்கும் அடிப்படை. இதில் தெளிவிருந்தால் வெற்றியின் தோள்மீது கைபோட்டு வலம் வரலாம்" என்கிறார். இவரது மிராஸிஸ் கன்சல்டேஷன் நலிவடைந்த தொழில்கள் மீண்டு வருவதற்கான தொழில் அணுகுமுறைகளை வழங்கி வருகிறது. இதுவரை சுமார் இருபத்தைந்து நிறுவனங்களை தமது அணுகுமுறை நுட்பத்தின் மூலம் மீட்டிருக்கிறார். நிறுவனங்களின் வெற்றிக்கு வழிகளாக அவர் நம்மிடம் கூறியவை...



• நெடுமாறன்

"ஒவ்வொரு நிறுவனத்துக்கும் ஒரு தொழில் அணுகுமுறை உண்டு. சிறிய, பெரிய கம்பெனிகளுக்கு ஏற்ப அந்த அணுகுமுறைகள் மாறுபடும்.

முதலீடு, வியாபாரம், தொழில் நுட்பம், போன்றவை ஒரு நிறுவனத்தில் சமன்பாட்டில் இருந்தால் அது வளர்ச்சியை நோக்கும் நிறுவனமாக அமையும்.

புதுப்புதுப் பண்புகளை, தொழில் நுட்பங்களை, மாற்றங்களை அனுமதிக்கும்போதே நிறுவனங்கள் அசுர வளர்ச்சிக்கான படியில் அடியெடுத்து வைக்கின்றன.

'ஜான்சன் அண்டு ஜான்சன்' நிறுவனம் 'ஆசிட் டெஸ்ட்' எனப்படும் சோதனையில் தப்பி வந்ததும், அதன் அணுகுமுறையால்தான்.

அந்த நிறுவனம் தயாரித்த 'டைரினால்' என்ற மாத்திரையை உண்டு அமெரிக்காவின் சிகாகோ நகரில் ஏழு பேர் இறந்துவிட்டனர். மெடிக்கல் கவுன்சில், தயாரிப்பை நிறுத்தச் சொல்லி விட்டது.

கம்பெனி என்ன செய்தது தெரியுமா?

அடுத்த 48 மணி நேரத்துக்குள் உலகெங்கும் தாம் அனுப்பியிருந்த மாத்திரைகளைத் திரும்ப வரவழைத்து, மக்களுக்கு அதிருப்தி வராவண்ணம் பார்த்துக் கொண்டது.

எந்த ஒரு நிறுவனமும் அதன் வாடிக்கையாளரின் நன்மதிப்பைப் பெற வேண்டியது மிக அவசியம்.

ஆகவேதான் எங்கள் மிராஸிஸ் ஸ்தாபனத்தை முறைப்படுத்தக் கூடிய பண்புகள், உளவியல் பாதிப்பு, பாதுகாப்பு அம்சங்கள், சுகாதாரம், ஒழுக்கம், பகிர்வு, நேரப் பராமரிப்பு என்கிற இருபத்தேழு பகுதிகளாகப் பிரித்து, ஒவ்வொரு பகுதியின் கீழ் இருக்கிற குறைகளை எப்படி நிவர்த்தி செய்ய வேண்டும் என்பதைப் பாடமாகக் கற்பிக்கின்றது" என்றவரிடம்,





# அணுகுமுறையால் ஜெயிக்கலாம்...

'பொருளாதார நெருக்கடியில் எப்படி ஒரு நிறுவனமும், அதைச் சார்ந்த தொழிலகங்களும் வளர முடியும்?'' என்றால், ''பொருளாதார நெருக்கடி என்பது மனத்தின் தவறான கற்பனைதான்! இருப்பதை வைத்து முறையான திட்டமிடலுடன் நிறுவனத்தை முன்னேற்றுவதுடன், எதனால் தேக்கம், தொய்வு என்பதையும் ஆராய்ந்து சரி செய்தால், நெருக்கடி நிலைமைகளைச் சரி செய்யலாம். எந்தப் பொருளை விற்பனை செய்தாலும் அல்லது சந்தைப்படுத்தினாலும் அந்தப் பொருளைத் தட்டுப்பாடு இல்லாமல் வாடிக்கையாளருக்குக் கொடுக்கும் முறையைக் கையாள வேண்டியது மிகவும் அவசியம்!

நமக்குக் கிடைக்கின்ற வருமானத்தில் ஒரு குறிப்பிட்ட சதவிகிதத்தைச் சேமிப்பாக, கட்டாயம் வைத்துக்கொள்ளவேண்டும். அது மிக முக்கியமான காலகட்டத்தில் நமக்குக் கைகொடுக்கும்.

மூலதனம், சந்தைப்படுத்தல், தொழில் நுட்பம் இவற்றோடு மக்கள் மனத்தில் நம்பகத்தன்மையினையும், எதிர்பார்ப்பையும் உருவாக்கிவிட்டால் தொழில்துறையில் பல சாதனைகளைப் படைக்கலாம். நிறுவன முறைப்படுத்துதலும், தொழில் சார்ந்த அணுகுமுறையுமே இந்தச் சாதனைக்கு அடிப்படை'' என்கிறார் நெடுமாறன்.

**''முறையாகத் திட்டமிட்டு, தேக்கம், தொய்வுக்கான காரணங்களை ஆராய்ந்து சரி செய்தால் மீளலாம்!''**

**- தர்ஷினி**

படம் : **பொள்ளாச்சி சுந்தரம்**

# சினிமா

'ராம்' திரைப்படத்துக்குப் பிறகு அமீர் இயக்கும் 'பருத்தி வீரன்' சூர்யாவின் தம்பி கார்த்திக் நடிப்பதாலேயே மிகுந்த எதிர்பார்ப்பையும், உண்மைக் கதை சினிமாவாகிறது என்பதால் அதிக ஆவலையும் ஏற் படுத்தியிருக்கின்றது. அந்த எதிர்பார்ப்புகளுடன் அப் படத்தின் 'எடிட் டிங்'கில் இருந்த இயக்குநர் அமீரைச் சந்தித்தோம்...

**ஆக்ஷன் படங்களே வந்து அச்சுறுத்திக் கொண்டிருக்கும் தருணத்தில் உங்களின் 'பருத்தி வீரன்' எப்படியிருப்பான்?**

"புதிய கண்டுபிடிப்புகள், தொழில்நுட்ப வளர்ச்சிகள் என ஒரு பக்கம் நாடு முன்னேறிக் கொண்டிருந்தாலும், கிராமப்புறங்களில் காலையில் எழுந்து நீராகாரம் குடித்து, தூக்கு வாளியில் சாதத்தைப் போட்டு நிரப்பிக்கொண்டு, வயல்வெளியை நோக்கிச் செல்வதும் உறவு முறைகளை வைத்துப் பழகிக் கொள்வதும் இயற்கையின் மென்மையும் இன்னும் மாறாமல்தான் இருக்கின் றன. இதைக் கருவாக வைத்துத்தான் பருத்தி வீரனை உருவாக்கியிருக்கிறேன். ஆக்ஷன் படமா என்றால், ஆக்ஷன் படம்தான்... ஆனால், தேவையற்று வருவ தல்ல. தேவைக்குத் தேவையான அளவே வரும்."

**கார்த்திக் எப்படி?**

"அப்பாவும் அண்ணனும் நடிகர்கள் என்கிற பந்தா அவர் மனத்தில் துளியும் இல்லை. ஷூட்டிங் ஸ்பாட்டில் எவ்வளவு திட்டினாலும் 'ஸாரி...' சொல்லிவிட்டு, ஈடுபாட்டுடன் நடிப்பார். சூர்யாவுக்கும் மேலே பெரிய ஹீரோ வாக வருவார் என்பதில் சந்தேகமில்லை."

**சமுத்திரக்கனி இயக்கத்தில் நீங்கள் ஹீரோவாக நடிக்கவிருந்த படம் என்னவானது?**





"அது ஒரு குடும்பக் கதை. ஆனால் என் சக நண்பர்கள் சிலர் 'நீங்க நடிக்கவிருக்கும் படத்தை நீங்களே இயக்கினால் என்ன?' என்றார்கள். 'தமிழ் எம்.ஏ' படத்தில்கூட நான்தான் ஹீரோவாக நடிக்க வேண்டியது. ஆனால் பருத்தி வீரனில் பிஸி யாக இருந்ததால், முடியாமல் போய்விட்டது. அடுத்து நான் இயக்கும் படத்தில் கண்டிப்பாக ஹீரோவாக நடிப்பேன். விஜிஸ்ட்துரை இயக்கத்தில் 'நேபாளி', சசியின் இயக்கத்தில் 'சுப்ர மணியபுரம்' ஆகிய இரண்டு படங்களைத் தயாரித்து வருகிறேன்."

**'பருத்தி வீரன்' உண்மைச் சம்பவத்தை அடிப்படையாகக் கொண்ட கதையா?**

"பருத்தி வீரன் என்பவர் வாழ்ந்திருக்கிறார் என்பது உண்மை. ஆனால் சினிமா என்று வரும்போது கற்பனை கலந்துதான் கதையாக்கியிருக்கிறேன். பாதி உண்மை; பாதிக் கற்பனை. கிராமத்துக்கே உரிய கோபம், சந்தோஷம், நகைச் சுவை என்று கிராமத்தின் மண்வாசனை குன்றாமல் இருக்கும்."

**பாலாவின் 'நான் கடவுள்' படத்துக்குப் போட்டியாக 'பருத்தி வீரன்' படத்தை எடுக்கிறீர்களா?"**

"'பருத்தி வீரன்' வந்த பிறகுதான் 'நான் கடவுள்' படம் வரும். இந்தப் படங்களில் போட்டி இல்லை. ஆனால் ஒரு சக படைப் பாளியாக நான் பாலாவோடு கண்டிப்பாக போட்டி போடுவேன்."

**- ம. மனோ**

படம்: **பொள்ளாச்சி சுந்தரம்**



# "சூர்யாவுக்கும் மேலே...!"

-உருகுகிறார் அமீர்



# பேச வைத்த ஸ்ரீ ராகவேந்திரர்!



## அதிசயம் செய்த யோகி!

யோகி ராம் சூரத் குமாரைச் சந்திக்கச் சென்றிருந்தேன். என் அருகில் ஒரு வாலிபர் கையில் நோய்வாய்ப்பட்ட குழந்தையுடன் நின்று கொண்டிருந்தார். அவரை அருகில் அழைத்த யோகி, 'வாசலில் கார் இருக்கிறது. குழந்தையை மருத்துவமனைக்கு அழைத்துச் செல்' என்று கூறினார். அழைத்துச் சென்று திரும்பியவர், குழந்தை கண்விழித்து விட்டதாகக் கூறினார். பின் அவர் அருகிலிருந்த ஒருவரிடம், தமக்குக் கார் ஓட்டவே தெரியாது என்றும், தாம் எப்படி ஓட்டிச் சென்றுவிட்டு வந்தேன் என்பது மிகவும் ஆச்சரியமாக உள்ளது என்றும் தெரிவிக்க, யோகியின் அருளை நினைத்து வியந்தேன்.

- எஸ்.காயத்ரி, திருக்குறுங்குடி

என் தம்பியின் மனைவிக்கு திடீரென பேசும் சக்தி போய்விட்டது. டாக்டர் அறுவை சிகிச்சை ஒன்றுதான் வழி என்று சொல்லிவிட்டார். அவர் குணம் பெற வேண்டுமென்று ஸ்ரீராகவேந்திரரை வேண்டிக்கொண்டோம். ஒருநாள் நாங்கள் அனைவரும் ஹாலில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தோம். உள் அறையில் படுத்திருந்த என் தம்பியின் மனைவி, திடீரென "போகாதீங்க... நில்லுங்க, நில்லுங்க" என்று கூவியபடி வெளிய ஓடிவர, நாங்கள் அதிர்ச்சியடைந்துவிட்டோம். "என்னம்மா என்னாச்சு, யாரும் போகலியே" என்றேன், நான். "இப்ப ஒரு பெரியவர் காவி உடையில் வந்து என் தொண்டையை இலேசாக வருடிக் கொடுத்தார். அவர்தான் நான் கூப்பிட கூப்பிட, போய் விட்டார்" என்று தெளிவான குரலில் சொல்ல, அப்போதுதான் அவளுக்குப் பேச்சு மீண்டும் வந்துவிட்டதை நாங்கள் உணர்ந்தோம். அவள் சொன்ன அங்க அடையாளங்களை வைத்து, வந்தது ஸ்ரீராகவேந்திரரே என்பதைப் புரிந்து கொண்டோம்.

- சந்தியா ஸ்ரீனிவாசன், சென்னை -4

## அலமேலுவின் அருள்!

திருப்பதியில் 1980 ஜூனில் என் பையனுக்குப் பூணூல் கல்யாணம். பூணூலுக்கு முதல் நாள் ஸ்ரீ வெங்கடேசப் பெருமாளுக்குத் திருக்கல்யாணம் நடத்த ஏற்பாடு செய்திருந்தோம். பத்து பேருக்கு மட்டுமே உள்ளே நுழைவுச் சீட்டு அனுமதிக்கப்பட்டிருந்தது. பூணூலுக்கு வந்திருந்த உறவுக்காரர்கள் அச்சீட்டில் உள்ளே சென்றுவிட்டனர். நானும் என் மாமா பெண்ணும் உள்ளே செல்ல வழியில்லாத நிலையில், கோயிலின் எதிரிலுள்ள சுவாமி பற்றிய அருங்காட்சியகத்தைப் பார்த்துவரலாமென புறப்பட்டோம். இறங்கினோம். அப்பொழுது ஒரு வட இந்திய மாது கையில் நான்கு வயது சிறுவனுடன் வந்து ஒரு காகிதத்தைக் கொடுக்க, அதில் Admit four என எழுதியிருந்தது. நாங்களும் அந்த வட இந்தியப் பெண்ணுடன் கல்யாண உத்சவம் நடக்கும் ஆண்டவன் இடத்துக்குச் சென்றுவிட்டோம். ஸ்ரீ அலமேலு மங்கைத் தாயாரே எங்களை அழைத்துப் போனதாக இன்றளவும் திடமாக நம்புகிறேன்.

- தையு ராமமூர்த்தி, அண்ணா நகர்-40



# அம்மாவுக்குக் கிடைக்காத பரிசு!

காமன்வெல்த் நாடுகளுக்கான இலக்கிய நோபல் பரிசு என்று பெருமையுடன் குறிப்பிடப்படுவது புக்கர் பரிசு. ஒரு முறை, இருமுறை இல்லை. மூன்று முறை, இந்தப் பரிசுக்கான இறுதித் தேர்வுப் பட்டியலில் இடம் பெற்றார் அந்தப் பெண் எழுத்தாளர். ஆனால், பரிசுக்குரியவராகத் தேர்ந்தெடுக்கப்படவில்லை. அவருடைய மகளுக்கு இந்த வருடம் புக்கர் பரிசு கிடைத்துள்ளது. அம்மா அனிதா தேசாய். மகள் கிரண் தேசாய். முப்பத்தைந்து வயது கிரணுக்கு ஐம்பதாயிரம் பவுண்டு (ரூபாய் நாற்பத்து இரண்டு லட்சம்) பரிசு மட்டுமல்ல... மிகக் குறைந்த வயதில் புக்கர் பரிசு பெற்றவர் என்ற பெருமையும் கிடைத்துள்ளது. புக்கர் பரிசு பெறும் மூன்றாவது இந்திய எழுத்தாளர் இவர். பரிசு பெற்ற கிரண் தேசாயின் நாவல்; 'தி இன்ஹெரிடன்ஸ் ஆஃப் லாஸ்'. நடுவர் குழுவினரின் ஏகமனதான தேர்வு இந்த நாவல் என்பது இன்னுமொரு சிறப்பு.



இது கிரணின் இரண்டாவது நாவல். மேற்கு வங்காளத்தின் டார்ஜிலிங் வட்டாரத்தில் கூர்க்கா இன மக்கள் தனி நாடு கோரி நடத்திய போராட்டத்தின் பின்னணியில் எழுதப்பட்டது இது. ஓய்வு பெற்ற நீதிபதி மற்றும் அவருடைய பேத்தியின் போராட்டங்களைச் சொல்லும் கதை. கிரண் அந்தப் பகுதியில் வசித்தவர் என்பதால், தமது அனுபவங்கள், தாம் அறிந்த விஷயங்கள் இவற்றுடன் கற்பனையையும் கலந்து நாவலை எழுதி இருக்கிறார். இதனை எழுதி முடிக்க இவருக்கு ஏழு ஆண்டுகள் ஆயினவாம்! அதன்பிறகு, புத்தகமாக வெளியிடுவதற்குச் சுமார் ஒரு வருட காலம் போராட வேண்டி இருந்ததாம். "என்னுடைய முதல் புத்தகத்தை வெளியிடுவதற்குக் கூட நான் இந்த அளவுக்குச் சிரமப்படவில்லை" என்னும் கிரண், "என் வீட்டில் எனக்கு மிகவும் பிடித்த இடம் சமையலறைதான். சமைப்பது எனக்கு ரொம்பப் பிடிக்கும். அவ்வப்போது பழைய காலத்து ஐட்டங்களைச் சமைத்துச் சாப்பிடுவது எனக்கு விருப்பமான ஒன்று. சமைக்கும்போதும், சாப்பிடும்போதும் என் மனசு மிகவும் இலேசாவதாக நான் உணர்கிறேன்.

காலை நேரத்தில் எழுதுவதையே விரும்புகிறேன். என் வீட்டுச் சமையல் அறையில், ஃப்ரிட்ஜுக்குப் பக்கத்தில் அமர்ந்து எழுதுவது ரொம்பப் பிடிக்கும்" என்கிறார்.

- கௌதம்ராம்

# மழைக் குடை?

சீதா போகும்போது வெறிச்சோடி கிடந்த வானம் இப்போது மேகங்களைத் திரட்டி ஒன்றுகூடி நிற்கிறது. 'உச்சியில மேகம் இருந்தா நிச்சயம் மழ வரும்' எப்போதோ பாட்டி சொன்னது ஞாபகத்துக்கு வந்தது. காய்கறி வாங்கக் கூப்பிடும் தூரத்தில் உள்ள கடைக்குக்கூட கக்கத்தில் குடையை இடுக்கிக் கொண்டு வரும் தான் இன்று பிள்ளைகளைக் கூப்பிட அதை எடுத்து வர மறந்ததை நினைத்து நொந்து கொண்டாள் சீதா.

பளீரென மின்னலும் அதைத் தொடர்ந்து, கடகடவென இடியும் முழங்க இதுவரை சாரைசாரையாய் நடந்து சென்ற கூட்டம் கலைந்து அங்கும் இங்குமாகப் பரபரக்கிறது. ரகுவும் சுதாவும் இவளுடைய இரண்டு கால்களையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு மிரட்சியாகப் பார்க்கிறார்கள். குளிர்ந்த காற்று எங்கோ விழுந்துவிட்ட மழைத்துளி வாசத்தையும் சேர்த்துக் கொண்டு வருகிறது.

மழை பெய்யத் துவங்குவதற்குள் வீடு போய்ச் சேர்வது முடியாத காரியம். எங்காவது ஒதுங்கி நின்று போய் விடலாம் எனச் சுற்றும் முற்றும் பார்க்கிறாள் சீதா. தடியான லோடுமேன்களோடு இடித்துக் கொண்டு அசைபோட்டபடி இரண்டு ஆடுகளும் ஒதுங்கி நிற்கின்றன.

'பொட்' 'பொட்'டென ஓரிரு மழைத் துளிகள் கன்னத்தில் பட்டுக் கோடாய் வழிகிறது. சுதாவைப் பற்றிக் கவலையில்லை. தொட்டி நிறைந்துள்ள தண்ணீரில் முக்கி எடுத்தாலும் ஒன்றும் செய்யாது. ஆனால் ரகு நனைந்த மறு நிமிடமே மூக்கை உறிஞ்சுவான். தும்முவான். கணவன் சேகர் முறைத்துப் பார்ப்பான். 'ஆங்கில மருத்துவம் ஆயுள் குறைக்கும்' என்றொரு கொள்கைப் பிடிப்புள்ளவன். 'கொதி பிடிப்பது', 'சுக்கு கஷாயம் குடிப்பது' எனக் குழந்தைகளுக்கு ஒவ்வாத முரட்டு வைத்தியத்தை விழி உருட்டி கொடுக்கும்போது சீதாவுக்கு, பெற்ற வயிற்றைப் பிசையும்.

ஓட்டமும் நடையுமாய் கன்னிமாரம்மன் கோயில் தெருவுக்குள் வந்து விடுகிறாள். இதற்கு மேல் பொறுக்க முடியாது என்ற நோக்கோடு மழைத்துளிகள் பூமியோடு கைகோக்கின்றன.

பரந்த குடையோடு சென்ற பெரியவர் ஒருவருடைய குடைக்குள் ரகுவையும் சுதாவையும் தள்ள, அவர் குடையைத் தன் பக்கமாய்ச் சாய்த்து வள்ளல் தன்மையைக் காட்டிச் சுருங்குகிறார்!

குழந்தைகளைத் தன் சேலை முந்தியில் சேர்ந்து புத்தகப்பைகளை இடுப்பில் திணித்துப் பரிதவித்தவளுக்கு உயர்ந்து நின்ற ஜவுளிக்கடை ஆறுதல் அளிக்கிறது. ஓடிச்சென்று கடையோரத்தில் நிற்க, கடைக்காரக் காவலர் 'கொஞ்சம் நகர்ந்



துக்கோம்மா... 'ஷோகேஸ்' பொம்ம நனையுது இங்கதான் வைக்கணும்...' என்பதில் குறியாக இருக்கிறான். நகர்ந்தால் நனைவோம் என்பதைப் புரிந்து கொண்டவள் நனைந்து நின்ற கோலத்திலே வெளியேறுகிறாள்.

நனைவதைத் தவிர வேறு வழியில்லை என்று குழந்தைகளைப் புடைவையைச் சுற்றி இறுக்கிப் பற்றிக் கொண்டு நடை மேடை வழியாக வேகமாக நடக்கிறாள். மழைக்கு இப்போது மகிழ்ச்சி! ஓங்கி ஒய்யாரமிட்டுப் பெய்ய ஆரம்பிக்கிறது. இனி குழந்தைகள் நனைவதைத் தடுக்க முடியாது என்ற நிலையில்தான் அவரைப் பார்க்கிறாள். உள்ளே போகலாமா வேண்டாமா என அவ்விடத்தின் அழுக்கால் மனம் பட்டிமன்றம் நடத்துகிறது.

"என்ன தாயி! நனைஞ்சுக்கிட்டே



போற... இங்கன வா... குனிஞ்சுதான் வரணும்... வாங்க கண்ணுகளா.."

தெருவோரம் செருப்பு தைக்கும் கடை வைத்திருக்கும் அந்தக் கிழவர் வாஞ்சையோடு பேச, உள்ளே நுழைந்து கொண்டாள் சீதா.



பிய்ந்துபோன பழைய செருப்புகள், குடைகள், நூல்கண்டு எனப் பரவிக் கிடக்கின்றன. ஓரத்தில் பாஸ்போர்ட் சைஸில் ஆஞ்சநேயர் படம். அதன் தலையில் வாடாத செம்பருத்திப் பூ. கிழிந்துபோன கோணிப் பைகளும் பிளாஸ்டிக் பைகளும் மேற்கூரையாக இருக்கின்றன. உடைந்து போன குழாய் துண்டுகள் தூண்களாக நிற்கின்றன. துளியளவு தண்ணீர்ச் சிதறல் கூட உள்ளே வராமல் சீதாவும் குழந்தைகளும் கோழி இறகுக்குள் ஒடுங்கி நிற்கும் குஞ்சுகள் போல பத்திரமாய் இருக்கிறார்கள். கிழவர் மட்டும் கொஞ்சம் நனைகிறார். சீதாவுக்குப் பாவமாய் இருக்கிறது.

"தாத்தா கொஞ்சம் உள்ள தள்ளி வாங்க... நனையாதீங்க.." என்கிறாள்.

"வெயிலும் மழையும் போர்வ மாதிரி தாயி... ஒண்ணுஞ் செய்யாது... எத்தன மழ பெஞ்சாலும் அதுக்குத்தான் அலுக்கும்... எங்களுக்கு மரத்துப்போன தோலு..." பிஞ்சு போன செருப்பைத் தைக்கும் காரியத்தில் கண்ணாயிருக்கிறார் அவர்.

ஓய்ந்து போன மழை வானத்தை வழித்து எறிந்துவிட்டு புறமுதுகு காட்டி ஓட, சாலை இருமருங்கிலும் அசுத்தங்களை அள்ளிக்கொண்டு ஓடுகிறது தண்ணீர்.

சீதாவும் குழந்தைகளும் வெளியே வர, வெளிச்சம் கண் கூச வைக்கிறது.

"தாத்தா போயிட்டு வர்றோம்... ரொம்ப நன்றி..." சீதா சொல்லும்போதே கண்ணீர் கண்களுக்குத் திரை போடுகிறது.

"அட... போதாயி... என்ன செஞ்சுட்டேன் மலைய புரட்டுனனா? இல்ல உங்கள தூக்கி தோள்ல வச்சுருந்தனா? மனுஷனுக்கு மனுஷன் இதக் கூட செய்யலேன்னு வச்சுக்கோ இப்ப பெஞ்சுதே பச்சை பசுரெல்லாம் உசுரு பிழைக்க பெஞ்ச மழ அது உலகத்துல பெய்யாமலே போயிடும்..' சாதாரணமாகப் பேசிய கிழவர் நிமிராமலே தமது வேலையைத் தொடர்கிறார்.

**செ.செண்பகக்கண்ணு**

தள்ளிச் சென்று விட்ட சீதா, அந்தப் பிளாட்பாரக் கடையைத் திரும்பிப் பார்க்கிறாள். அது கண்ணன் ஆயர்களைக் காக்க சுண்டுவிரலால் தூக்கிய கோவர்த்தன கிரியாய்த் தெரிகிறது. ●

# ஹா...ஹா...ஹா...

''என் முத பையன் டாக்டர். ரெண்டாவது பையன் கண்டக்டர்.''

''ரெண்டு பேருக்குமே டிக்கெட் தர்ற வேலைன்னு சொல்லுங்க.''

- செந்தில்குமார்





''எப்படி அந்த 'வால் க்ளாக்' கீழே விழுந்து உடைஞ்சுது?''

''நான்தான் சொன்னேனேம்மா, அதுக்கு இப்ப நேரம் சரியில்லேன்னு.''

- வெ.சீதாராமன்

## நேரம் சரியில்லே...

''கைரேகை ஜோசியர் வட்டிக்கடை வச்சது பெரிய வம்பாப் போச்சுங் கறியே! எப்படி?''

''கடன் கேக்கிறவங்களோட ஆயுள் தீர்க்கமான்னு பார்த்துத்தான் கடன் தர்றாரு!''

- செவல்குளம் ஆச்சா





''மாங்கா காய்ச்சா 'மங்கும்', புளியங்கா காய்ச்சா 'பொங்கும்'னு தப்புத் தப்பாச் சொல்றாங்களே?''

''அப்புறம் எப்படிச் சொல்லணும்...?''

''ரெண்டுமே மரத்துலதான் தொங்கும்!''

- கோ.கலியபெருமான்



# ஐடியா VS அழகு!

புதுமையாக ஏதாவது செய்து கொண்டே இருக்கும் நம் ஜனாதிபதி கலாம் அரசாங்கத்துக்கு ஒரு திட்டத்தை அனுப்பி வைத்திருக்கிறார். ஜனாதிபதி மாளிகைக்குத் தேவையான மின்சாரத்தை, சூரிய ஒளியைக் கொண்டே தயாரித்துக் கொள்ளும் அந்தத் திட்டத்துக்கு 135 கோடி ரூபாய் செலவு பிடிக்கும். இதன் மூலம் ஐந்து மெகாவாட் மின்சக்தி உற்பத்தி செய்ய முடியும். இதில் ஒரு சிக்கல் என்னவெனில், சூரிய மின்சாரம் தயாரிக்கும் உபகரணங்களை ஜனாதிபதி மாளிகையின் மேற்கூரைப் பகுதியிலோ அல்லது, அதற்கென பிரத்யேகமான கம்பங்களை எழுப்பி, அவற்றின்மீதோ பொருத்த வேண்டும். இதில் எதைச் செய்தாலும், ஜனாதிபதி மாளிகையின் கலை அழகு பாதிக்கப்படும் என்பது ஒரு சிலரது வாதம். மத்திய அரசு இந்தத் திட்டத்துக்குக் கல்தா கொடுக்கத் தீர்மானித்து விட்டதாம்.



கேரளா கொல்லத்தில் வசிக்கும் கோபாலகிருஷ்ணன் - தங்கமணி தம்பதிக்கும் நாம் வாழும் இந்த சூரிய குடும்பத்துக்கும் மிக நெருக்கமான ஒரு தொடர்பு இருக்கிறது. இந்தத் தம்பதி தங்கள் பிள்ளைகளுக்கு யுரேனஸ், நெப்டியூன், புளூட்டோ என்று பெயரிட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு ஒரே பெண், வீனஸ்!

சந்திரபாபு நாயுடு தமது ஆட்சியின் போது மேம்பாலங்களாகக் கட்டி, ஹைதராபாத்துக்கு ஒரு ஹை-டெக் லுக் கொடுத்தாலும், புகழ் பெற்ற சார்மினாரை யொட்டிய பழைய நகரம் இன்றும் எந்தவித அடிப்படை வசதிகளும் இல்லாமல் இருக்கிறது. இருபத்தி நான்கு வருடங்களுக்கு முன்னால், சார்மினார் பகுதியில் உள்ள சாலைகளை அகலப்படுத்தும் திட்டம் ஆரம்பிக்கப்பட்டது. ஆனால் இன்றுவரை அது செயல்படுத்தப்படவில்லை. அண்மையில், ஆந்திர முதல்வர் ராஜசேகர ரெட்டி, சார்மினார் உள்ளேயே பத்திரிகையாளர்களைச் சந்தித்தார். பழைய நகர மேம்பாட்டுக்காக 2000 கோடி ரூபாயில் திட்டங்களை அறிவித்தார். ஆறே மாதங்களில், சாலை விஸ்தரிப்புப் பணிகள் முடிந்துவிடும். கழிவு நீர்க் கால்வாய்த் திட்டத்துக்கு ஆயிரம் கோடி, குடிநீர்த் திட்டத்துக்கு எண்ணூறு கோடி என்று அறிவித்திருக்கிறார்!

**- எஸ்.சி.எம்.**

# சந்தேகம்...





தம் திருமணத்துக்கு வேண்டிய துணி மணிகள் மற்றும் நகைகள் வாங்குவதற்காக ராதாவையும், ஷ்யாமையும் அழைத்துச் செல்ல, தம் வருங்கால கணவன் கௌரிசங்கருடன் வருகிறாள் பாமா. ஆனால் ஷ்யாம் வர மறுக்கிறான். ராதா அவனை வந்தே ஆக வேண்டும் என்று வற்புறுத்த, 'பரவாயில்லை விட்டுவிடு' என்கிறாள் பாமா. அதோடு நில்லாமல், சின்ன வயதிலிருந்தே தமக்காக அக்கறை எடுத்துக் கவனித்துக் கொள்ள யாருமில்லை என்று கண்ணீர் மல்கக் கூறுகிறாள். அதைப் பார்த்து நெகிழ்ந்துபோன ராதா, 'உனக்காக எது வேண்டுமானாலும் செய்ய நானிருக்கிறேன்' -என்கிறாள்.

அனைவரும் புடைவைக்கடையில் இருக்கும்போது ஆபீசுக்கு வரும் வடநாட்டுப் பெண்களுக்குப் புடைவை எடுப்பதற்காக, தன் மேனேஜருடன் வருகிறாள் கவிதா. நீண்ட நாட்களுக்குப் பிறகு அவளைப் பார்க்கும் ராதா ஓடிப்போய்ப் பேசுகிறாள். அப்போது ஷ்யாம் பாமாவோடு வந்ததைப் பார்த்தது உண்மை என்று கவிதா சொல்ல, மீண்டும் அவர்களுக்குள் வாக்குவாதம் வருகிறது. அதன்பிறகு ராதா, ஷ்யாம், பாமா, கௌரி ஆகியோர் ஒரு ரெஸ்டாரெண்ட்டுக்குச் செல்ல, அங்கு பாமா கௌரியோடு மிகவும் நெருங்கிப் பேசுகிறாள். அதே ரெஸ்டாரெண்ட்டுக்கு பாமாவோடு வந்த நாட்கள் ஞாபகத்துக்கு வர, ஆத்திரத்தில் ஷ்யாம் கண்ணாடி டம்ளரை உடைக்க, கௌரிசங்கருக்கு ஷ்யாம் மேல் இனம் புரியாத சந்தேகம் ஏற்படுகிறது.

தன் கணவனின் சுயரூபம் தெரிந்த கல்பனா அவனைக் கேவலமாகத் திட்டுகிறாள்; பின் ஒரு முடிவுக்கு வந்து மாதவனின் நண்பன் மகேஷைத் தம் வீட்டுக்கு வரவழைக்கிறாள். பின் மாதவன் முன்னிலையில் தேஜாவைத் திருமணம் செய்து கொள்ள சம்மதமா என்று மகேஷிடம் கேட்கிறாள். மகேஷ் சந்தோஷமாக அதற்கு ஒத்துக்கொள்கிறான். தேஜாவும் ஆசையுடன் இதற்குச் சம்மதிக்கிறாள். பலத்த அதிர்ச்சிக்குள்ளான மாதவன், இதைத் தடுக்க வழி தெரியாமல் தடுமாறுகிறான்.

இதற்கிடையில் ஒரு வேலைக்குப் போய்ச் சம்பாதிக்காவிட்டால், குழந்தைகளை அழைத்துக் கொண்டு வீட்டைவிட்டு வெளியேறிவிடுவதாக கவிதா சொல்ல, அருண் நிலைகுலைந்து போகிறான்.

'கண்ணாடி கதவுகள்' விமர்சனப் போட்டியில் பங்கேற்ற ஆயிரக்கணக்கான வாசகர்களில் சிறப்பான விமர்சனம் எழுதி இரண்டாம் கட்டமாகப் பரிசு பெறும் மூன்று பேர் :

1. ஆர்.வசந்தா, சென்னை - 28
2. ஆர்.ராமசுப்ரமணியன், வடவள்ளி
3. ஏ.அழகப்பன், சிவகங்கை

# துள்ளித் திரிந்த காலம்-2

• பிரதாப் சிங்



“என்னுடைய இருபத்தைந்தாவது வயதுக்குள் ஓர் அச்சகத்தை நிறுவி, வர்த்தகம் நடத்தும் வாய்ப்பை எனக்கு அளித்துவிட்டார் கடவுள். எனவே அந்த வயதில் வாழ்க்கையில் எப்படி வெற்றி பெறுவது என்பதே என்னுடைய ஒரே சிந்தனையாக இருந்தது. நான் சந்தித்த சவால்களும், சங்கடங்களுமே என்னை மிகச் சுறுசுறுப்பாகச் செயல்பட வைத்தன. தடைகளை மீறிச் சாதிக்கும்போது கிடைக்கும் மனத் திருப்தியையும் துள்ளலையும் வார்த்தையால் விவரிக்க முடியாது.

நெல்லை - நாகர்கோயில் சாலையில் கொஞ்சம் உள்ளடங்கிய கிராமம் வடக்கன்குளம். அங்கு விவசாயம்தான் பிரதானம். அங்குள்ள தெரசா உயர்நிலைப்பள்ளியில்தான் என் பள்ளிப் படிப்பு. வீட்டில் நான்தான் மூத்தவன். எனக்குக் கீழே மூன்று சகோதரர்கள், நான்கு சகோதரிகள். அப்பா மரிய அந்தோணி, எழுத்தாளர். கொழும்பு, வீரகேசரி பத்திரிகையில் சில காலம் வேலை பார்த்தவர். அவர் வீட்டில் இல்லாத காரணத்தால் எனக்குப் பொறுப்பு அதிகமாகி விட்டது. சகோதரர் மற்றும் சகோதரிகளை மேய்க்கும் வேலையும் அந்தப் பொறுப்பில் அடங்கும்.

ஒருமுறை கணக்கு வாத்தியார் என்னை வீட்டுக்கு அழைத்துவிட்டார். என்னவோ, ஏதோ என்று நடுங்கி, பள்ளி விட்டதும் ஓடினால் 'பயப்படாதே' என்று கூறி, மிக எளிய முறையில் கணக்கின் அடிப்படை விஷயங்களை எனக்குக் கற்றுத் தந்தார். கசந்த கணக்கு எனக்குக் கைவந்தது அப்போதுதான்!

அம்மாவுடன் நாங்கள் கைகோத்துக் கொண்டு ஞாயிறு காலை சர்ச்சுக்குச் சென்று விடுவோம். இது ஒவ்வொரு வாரமும் தவறாது. கிறிஸ்துமஸ் வருவதற்கு ஒரு மாதத்துக்கு முன்பே மனத்தில் சந்தோஷம் மேடை போட்டுவிடும். தேவாலயத்தைச் சுத்தப்படுத்துவது, தோரணங்கள், நட்சத்திரங்களைக் கட்டுவது என்று பல வேலைகளில் பெரியவர்கள் இறங்கும் போது, வாண்டுகளான நாங்களும் அவர்களுக்குத் துணையாக இருப்போம். கிறிஸ்துமஸ் தாத்தா எப்போது பரிசோடு வருவார் என்று இரவுகளில் கொட்டக் கொட்ட விழித்திருப்போம். புதுத் துணிகளை அப்பா அம்மாவுக்குத் தெரியாமல் முதலில் போட்டுப் பார்த்துக் கொள்வதில் ஒரு அற்ப சந்தோஷம். ஊருக்குப் பக்கத்தில் இருந்த குரங்காறுக்குச் சென்று நீச்சலடித்துக் கும்மாளம் போடுவோம்.



ஊரிலேயே எஸ்.எஸ்.எல்.சி. முடித்ததும் சில காலம் நெல்லை டவுனில் இருந்தேன். தாமிர பரணியில் அன்றாடம் சந்தோஷமாகக் குளிக்க முடிந்ததே தவிர மனதுக்கு நினைவான வேலை கிடைக்கவில்லை. உடனே சென்னைக்கு வந்துவிட்டேன். சொந்தக்காரர் அச்சகத்தில் கணக்கர் வேலை. கணக்கராக இருந்ததால்,

## 'ஈகிள் டைரி' டைரக்டர் பிரதாப் சிங்




ஆடிட்டர்கள், வருமான, விற்பனை வரி அதிகாரிகள் என்று தொடர்பு வளர்ந்தது. என் இளமையில் எனக்குக் கிடைத்த நண்பர்கள் அனைவருமே, சாதிக்க வேண்டும் என்ற துடிப்பிலிருந்தவர்களே தவிர வேறு எந்தத் தீய பழக்கத்துக்கும் அடிமையாகாதவர்கள். சில காலம் வேலை செய்த பிறகு சொந்தமாக அச்சகம் துவங்கினால் என்னவென்ற சிந்தனை வந்தது. பல நாட்கள் இந்தச் சிந்தனையுடன் மணிக்கணக்கில் மெரினா கடற்கரையில் அமர்ந்திருப்பேன். இதே யோசனையுடன் பிராட்வே

# கிறிஸ்துமஸ் தாத்தா எப்போது வருவார்?

தெருக்களில் கைரிக்ஷாக்காரரின் குறுக்கே போய், அவர்களிடம் திட்டுவாங்கியிருக்கிறேன். ஏதோ எதிர்கால சிந்தனையில், ஓடுகின்ற டிராமிலிருந்து இறங்கித் தெருவில் விழுந்திருக்கிறேன். கையிலிருந்த சேமிப்பை முதலாகப் போட்டு பழைய மிஷின் ஒன்றை வாங்கி, தைரியமாக அச்சகம் துவங்கிவிட்டேன்.

பெரும்பாலும் லாரி டிரான்ஸ்போர்ட் கம்பெனிகளுக்கு அச்சு வேலைகளைச் செய்து கொடுத்தேன். ஆர்டர்கள் நிறைய கிடைத்தன. வருடா வருடம், அந்தக் கம்பெனி முதலாளிகளுக்குக் காலண்டர், டயரி கொடுப்பேன். நூற்றுக்கணக்கான டயரிகள் வாங்க வேண்டியிருக்கும். எனக்கு முழு திருப்தியுடன் தரமான டயரிகள் மார்க்கெட்டில் கிடைக்காது. 'இந்த டயரிகளை நாமே தயாரித்தால் என்ன?' என்ற எண்ணம் தோன்றியது அப்போதுதான். மிகக் குறைவான விலையில் இரண்டு செக் நாட்டு மிஷின்களை வாங்கினேன். காகித விற்பனையில் இருந்த சங்கர்ராவ் எனக்குக் கை கொடுத்தார். சுகின் டயரி பிறந்தது.

என்னுடைய மற்றொரு முகம் புத்தகப் பதிப்பாளர். அறிஞர் அண்ணா, கலைஞரின் எழுத்துகள் எனக்கு மிகவும் பிடிக்கும். அச்சகம் இருந்ததால் புத்தகம் பதிப்பிப்பது சுலபமாகிவிட்டது. பூம்புகார் பதிப்பகம் பிறந்தது. அண்ணா, கலைஞர் எழுத்துகளைத் தவிர பல்வேறு தலைப்புகளில் புத்தகம் போட்டுவிட்டோம். வாஜ்பாய் கவிதைகளை மறைந்த வெங்கட சுப்பிரமணியன் தமிழில் மொழி பெயர்த்தார்; நாங்கள் புத்தகமாகப் போட்டோம். அதன் வெளியீட்டு விழா பிரதமர் வாஜ்பாய் வீட்டில் நடந்தது மறக்க முடியாத அனுபவம். ஒவ்வொரு புத்தகத்தைப் பதிப்பிக்கும்போதும் சிறகடித்துப் பறக்கும் மனது! வாழ்க்கையின் போராட்டங்கள் எனக்குக் கற்றுக் கொடுத்தவை ஏராளம்! இன்று நான் அவ்வப்போது சின்னச் சின்ன சமூகத்துக்குச் செய்துவரும் உதவிகளுக்குக் காரணம் அந்தப் போராட்டங்கள் கற்றுக் கொடுத்த பாடங்கள்தான்."

படம் : ராஜன்

# குரு பெயர்ச்சி



## மேஷம்:

இதுநாள் வரை 7-ம் இடத்தில் சஞ்சாரம் செய்த குருபகவான் 21.10.2006 முதல் 8-ம் இடத்தில் பெயர்ச்சி ஆகிறார். கடன், வழக்கு, பணி போன்ற தொல்லைகளை ஒழிப்பர். நீண்ட நாட்களாக முடிவு பெறாத எந்தக் காரியத்துக்கும் உடனடி தீர்வை அளிப்பார். திருமணத் தடையைப் போக்குவார். வராத நிலுவைகள் கைக்குக் கிடைக்கும்படி செய்வார். குழந்தைகள் வழியில் சுப காரிய நிகழ்ச்சிகள் உண்டாக்குவார். பணக்கஷ்டம் விலகும். வியாழன்தோறும் ராகவேந்திரர் சுவாமி (அ) குருபகவானுக்கு விளக்கு ஏற்றி வருவது நற்பலனை அதிகரிக்க வைக்கும். நினைத்தது கை கூடும்.

## ரிஷபம்:

இதுநாள் வரை 6-ம் இடத்தில் சஞ்சாரம் செய்த குருபகவான் தற்பொழுது 7-ம் இடத்தில் பெயர்ச்சி ஆகிறார். 7-ம் இடம் என்பது களத்திர ஸ்தானமாக விளங்குவதால் திருமணக் காரியத்தை உண்டாக்குவார். மனைவி வழியில் சுபகாரியத்தை அளிப்பார். எண்ணிய காரியங்கள் அனைத்தும் வெற்றி வாகை சூடும். சொஸைட்டியில் நல்ல மதிப்பும், இழந்த செல்வாக்கைத் திரும்பப் பெறுதலும், மனத்தில் அசாத்திய தன்னம்பிக்கையும் உண்டாகும். உடன் பிறந்தவர்கள் மூலம் அனுகூலம் ஏற்படும். புதிய தொழில் வாய்ப்பு ஏற்படும். செய்தொழில் அதிக லாபம் ஈட்டும். மனக்குழப்பம் விலகும். கடன் தொல்லைகள் நீங்கும். பரிகாரம் தேவையில்லை.

## மிதுனம்:

இதுநாள்வரை குருபகவான் 5-ம் இடத்தில் சஞ்சாரம் செய்தவர் தற்பொழுது 6-ம் இடத்துக்குப் பெயர்ச்சி ஆகிறார். 6-ம் இடம் என்பது சத்ரு, ரோகம், கடன், வழக்கு ஸ்தானம் ஆகும். ஆதலால் கவனமாகச் செயல்பட வேண்டிய காலம் ஆகும். உடல் ஆரோக்கியத்தில் கவனத்துடன் இருக்க வேண்டும். வேண்டாத விஷயங்களில் மூக்கை நுழைத்துக் கெட்ட பெயர் வாங்கும் சூழ்நிலை வரும். கவனமாகச் செயல்பட்டு வந்தால் எந்தத் துன்பத்திலிருந்தும் விடுதலை கிடைக்கும். வியாழக்கிழமைதோறும் குருபகவானுக்கு விளக்கு ஏற்றி குரு காயத்ரி படித்து வருதல் நற்பலனை அளிக்கும். ராகவேந்திரர் சுவாமிக்கு வழிபாடு செய்து வர, கஷ்டம் விலகி நற்பலன் அளிக்கும்.



## கடகம்:

குரு பகவான் இதுநாள் வரை 4-ம் இடத்தில் சஞ்சாரம் செய்துவந்தார். தற்பொழுது 5-ம் இடத்துக்குப் பெயர்ச்சி ஆகிறார். 5-ம் இடம் என்பது புத்திர, பூர்வ, நண்பர், உறவினர் ஸ்தானம் ஆகும். நீண்டகாலம் குழந்தைப்பேறு இல்லாதவர்களுக்குக் குழந்தைப் பேறு உண்டாகும். பூர்வீகச் சொத்துகள் கைக்கு வந்து சேரும். திருமணத் தடைகள் விலகித் திருமணம்



# பலன்கள்

கைகூடும். புதிய முயற்சிகள் கைகூடும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். கணவன் – மனைவி உறவு நற்பலனைத் தரும். உத்தியோகத்தில் நற்பெயர், பதவி மாற்றம் கிடைக்கும். வீட்டில் அடுத்தடுத்து சுபநிகழ்ச்சி கூடி வரும். ஆன்மிக காரியங்களில் ஈடுபடுவீர்கள்; நற்பலனை அடைவீர்கள். பரிகாரம் தேவையில்லை.

**சிம்மம்:**

சிம்ம ராசிக்காரர்களாகிய உங்களுக்கு இதுநாள் வரை 3-ம் இடத்தில் சஞ்சாரம் செய்துவந்த குருபகவான் தற்போது 4-ம் இடத்துக்குப் பெயர்ச்சி ஆகிறார். 4-ம் இடம் என்பது குருவுக்கு ஏற்ற இடம் அன்று. சுகம், கல்வி, வீடு, வாகனம், தொழில் போன்றவற்றைக் குறிக்குமிடமாகும். கடந்த காலத்தில் ஏற்பட்ட சுக துக்கங்களிலிருந்து விடுதலை கிடைக்கும். குறிப்பாக, ஆரோக்கியத்தில் கவனம் செலுத்த வேண்டும். எதிலும் முட்டுக் கட்டை ஏற்பட்டு, பின் தீர்வு ஏற்படும். சிக்கனமும் சேமிப்பும் முக்கியம். புதிய முதலீடு செய்யும்போது கவனம் தேவை. குருவுக்கு அர்ச்சனை செய்து வரவும். ராகவேந்திரர் சுவாமி வழிபாடு நற்பலனைத் தரும்.

**கன்னி:**

இதுநாள்வரை 2-ம் இடத்தில் சஞ்சாரம் செய்துவருகிற குருபகவான் தற்போது 3-ம் இடத்துக்குப் பெயர்ச்சி ஆகிறார். 3-ம் இடம் என்பது தைரியம், தன்னம்பிக்கை, ஆற்றல், வெற்றி ஸ்தானம் ஆகும். ஆனால் 3-ம் இடம் குருவுக்கு ஏற்ற இடமன்று. இருந்தாலும் குரு பார்க்கும் இடம் நன்றாக இருக்கிறது. கணவர் - மனைவி உறவு நன்றாக இருக்கும். தடைவிலகித் திருமணம் கைகூடும். பொருளாதார முன்னேற்றம் ஏற்படும். மனத்தில் தன்னம்பிக்கை தைரியமும் மிகுந்து காணும். முயலும் காரியத்தில் வெற்றி கிட்டும். மனக்குறை நீங்கும். வழக்கு வெற்றி வாகை சூடும். வியாழன் தோறும் குருவுக்குத் தீபம் போட்டு அர்ச்சனை செய்து வந்தால் சிரமங்கள் குறையும். ராகவேந்திரரை வழிபடுதல் நற்பலனை அளிக்கும்.





**துலாம்:**

இதுநாள் வரை குருபகவான் ஜென்மராசியில் சஞ்சாரம் செய்த இவர் தற்போது ராசிக்கு 2-ம் இடத்தில் பெயர்ச்சி செய்யப் போகிறார்.











2-ல் இடம் என்பது வாக்கு, நாணயம், தனம், குடும்பம், கல்வி, செல்வம் போன்றவற்றைக் குறிக்கும் இடமாகும். 2-ம் இடம் பண பரஸ்தானமாக விளங்குவதால் செல்வத்தை வாரி வழங்கும். வாக்கு வன்மை மேலோங்கச் செய்யும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். சமுதாயத்தில் மதிப்பும் மரியாதையும் கூடும். நீண்ட காலம் முடிவு பெறாத பிரச்னைகள் முடிவுக்கு வரும். போட்டி,

தஞ்சை பரத்வாஜ்

பொறாமை நீங்கும். மனத்தில் தன்னம்பிக்கை, துணிவு ஏற்படும். சுபகாரிய செலவுகள் ஏற்படும். பரிகாரம் தேவை இல்லை.

### விருச்சிகம்:

இதுநாள் வரை ராசிக்கு 12-ல் சஞ்சாரம் செய்து வந்த குருபகவான் தற்போது ஜென்ம ராசியில் பிரவேசம் செய்யப் போகிறார். குருபகவான் தங்களுக்கு நட்பு பெற்ற கிரகமாக விளங்குவதால் நல்லதைச் செய்வார். தவிர கெடுதல் செய்ய மாட்டார். குழந்தைகள் வழியில் சுப நிகழ்ச்சிகள் உருவாக்கும். பூர்வீகச் சொத்து கைக்குக் கிடைக்கும். புதிய தொழில் துவங்கலாம். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். புதிய வேலை கிடைக்கும். மேற்கல்வி கற்க வெளிநாடு செல்வீர்கள். வழக்கு, வியாபாரம் வெற்றி அளிக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வியாழன்தோறும் ராகவேந்திரரை வழிபாடு செய்துவர, நற்பலனைப் பெறுவீர்.

## பரத்வாஜ் பதில்கள்...

### தனுசு:

இதுநாள் வரை குருபகவான் ராசிக்கு 11-ல் சஞ்சாரம் செய்தவர் தற்போது ராசிக்கு 12-ல் பெயர்ச்சி அடைகிறார். 12-ம் இடம் என்பது அயன சயன விரய, முக்தி ஸ்தானம் ஆகும். 12-ம் இடத்து குரு புகழை ஏற்படுத்துவார். நல்ல சுபசெலவுகளை உண்டாக்குவார். குடும்ப வழியில் திருப்தியான போக்கை உண்டாக்குவார். வீடு, மனை போன்றவற்றை அளிக்கும். கடன் தொல்லைகள் நீங்கும். உத்தியோகத்தில் நற்பெயர் கிட்டும். புண்ணிய ஸ்தலங்கள் செல்லும் வாய்ப்பு கிட்டும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். தெய்வபலத்துடன் எந்தக் காரியமும் வெற்றிவாகை சூடும். வியாழன் தோறும் ராகவேந்திர சுவாமி வழிபாடு செய்து வர, நற்பலன் கிடைக்கும்.

**• என் மகனுக்கு எப்போது திருமணம் நடக்கும்? அவனுடைய மண வாழ்க்கை நன்றாக அமையுமா?**

**- பி.எஸ்.மணி, சென்னை - 8**

உங்கள் மகனுக்கு 21.10.2006-க்குப் பிறகு திருமணம் கைகூடும். பிறந்த ஊருக்கு வெளியூரில் மேற்குத் திசையில் பிறந்த பெண் அமைவாள். உடன்பிறப்பு இருவர் இருப்பார்கள். லெட்சுமி என்று பெயர் முடியும். உறவில் அமையாது; அசலில் முடியும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். பரிகாரம் தேவை இல்லை.

**• என் நண்பரின் மகனுக்குத் திருமணம் ஆகிப் பதினைந்து ஆண்டுகள் ஆகின்றன. குழந்தைப் பாக்கியம் கிடைக்கப் பெறவில்லை. இனி வாய்ப்பு உண்டா?**

**- டி.எம். சுந்தரராமன், சென்னை - 4**

உங்கள் நண்பரின் மருமகளுக்குச் சுக்ர தசை நடைபெற்று வருவதால், கற்பம் தரிப்பதில் காலதாமதம் ஆகி இருக்கிறது. 2007-ல் கருவுற்று, ஆண் குழந்தை பிறக்கும் பாக்கியம் இருக்கிறது.

**• என் மகளுக்கு, கடந்த ஐந்து வரு**

### மகரம்:

இதுநாள் வரை குருபகவான் ராசிக்கு 10-ல் சஞ்சாரம் செய்தார். தற்பொழுது ராசிக்கு 11-ல் பெயர்ச்சி அடைகிறார். 11-ம் இடம் என்பது தொழிலுக்கு இலாபஸ்தானமாக விளங்குவதால் தொழில்துறையில் நல்ல ஆதாயத்தை உண்டு பண்ணும். தொழில் மூலம் ஆதாயம் ஏற்படும். புதிய தொழில்முயற்சி கைக்கு கிட்டும். வியாபாரத்தில் நல்ல இலாபத்தை உண்டு பண்ணும். தடை விலகித் திருமணம் காரியம் கைகூடும். வேலையில் இருந்த வந்த சிரமங்கள் மாறி வேறு வேலை கிடைக்கும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். பதவி உயர்வு,

இடமாற்றம் ஏற்படும். வீடு/வாகனம் வாங்கும் சூழ்நிலை உண்டாகும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். பரிகாரம் தேவையில்லை.

**கும்பம்:**

உங்களுக்கு இதுநாள் வரை 9-ம் இடத்தில் சஞ்சாரம் செய்த குருபகவான் தற்போது 10-ம் இடத்துக்குப் பெயர்ச்சி ஆகிறார். 10-ம் இடம் என்பது ஜீவன ஸ்தானம் தொழில் ஸ்தானம் ஆகும். 10-ல் குரு வந்தால் பதவி நஷ்டம், பண நஷ்டம் என்று சொல்வார்கள். ஆனால் இதைப் பற்றிக் கவலைப்படத் தேவை இல்லை. தன உயர்வு, பணப்பற்றாக்குறை தீரும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். நல்ல மதிப்பும் புகழும் கூடும். புது வீடு வாங்கும் யோகம் கிட்டும். சத்ரு தொல்லை நீங்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். குழந்தைகள் வழியில் சுபநிகழ்ச்சி ஏற்படும். வியாழன்தோறும் குருவுக்கு விளக்கு ஏற்றி, குரு காயத்ரி படித்து வர, நற்பலன் பெறுவீர்கள்.

**மீனம்:**

உங்களுக்கு இதுநாள் வரை குருபகவான் 8-ம் இடத்தில் சஞ்சாரம் செய்தவர் தற்போது 9-ம் இடத்துக்குப் பெயர்ச்சி ஆகிறார். 9-ம் இடம் என்பது தர்ம, பாக்கிய, பித்ரு ஸ்தானம் ஆகும். நாடுவிட்டு நாடு போய் சம்பாதிக்கும் நபர்களுக்கு அநேக நற்பலன்களை அள்ளித் தருவார். கடன் தொல்லையை, சத்ரு தொல்லையைப் போக்குவார். கல்வியில் மேலோங்கச் செய்பவர். வெளிநாடு சென்று கல்வி கற்கும் சூழ்நிலை உண்டாகும். மனத்தில் தைரியம், தன்னம்பிக்கை மிகுந்து காணும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். புண்ணிய ஸ்தலம் செல்வீர். நண்பர், உறவினரால் ஆதாயம் ஏற்படும். வழக்கு, வியாபாரம் வெற்றி அளிக்கும். பணக் கஷ்டம் இருக்காது. ஆன்மிக ஈடுபாடு அதிகமாகும். கௌரவப் பதவிகள் தேடி வரும். பரிகாரம் தேவை இல்லை.

---

**டங்களாக வரன் பார்த்து வருகிறோம். எதுவுமே சரியாக அமையவில்லை. எப்போது திருமணம் நடக்கும்?**

**- கே. பலராமன், டில்லி**

உங்கள் பெண்ணுக்கு 28 வயதில் திருமணம் நடக்கும். பிறந்த ஊருக்கு வடதிசையில் உடன்பிறப்பு இருவர் உள்ள இடத்திலிருந்து வரன் அமையும். 2007-ல் திருமணம் முடியும். அவசரக் கல்யாணம். இல்லறவாழ்வு நன்றாக இருக்கும்.

**• என் மகளுக்கு எப்போது திருமணம் நடக்கும்? மண வாழ்க்கை எப்படி அமையும்?**

**- பத்ம சிவாஜி, நீடாமங்கலம்**

தங்கள் மகளுக்கு சனிதசை நடைபெற்று வருகிறது. 23 வயதில் திருமணம் நடக்கும். தோஷம் இல்லாத ஜாதகத்தைச் சேர்க்கவும். 2007-ல் திருமணம் நடக்கும்.

**• என் மகனுக்கு எப்போது திருமணம் நடக்கும்? வேலை பார்க்கும் பெண் வரனாக அமைவாளா?**

**- வசந்தா, கீழ்ப்பாக்கம்**

உங்கள் பையனுக்கு, சென்னையில் பிறந்த, வேலைக்குச் செல்லும் பெண் வாழ்க்கைத் துணையாக அமைவாள். 31 வயதில்-2007-ல் திருமணம் நடக்கும்.

**• எனக்கு எப்போது திருமணப் பாக்கியம் கிட்டும்? மணமகள் எப்படி அமைவாள்?**

**- எம்.டி.பிரசாத், லால்குடி**

உங்கள் பிறந்த ஊருக்குப் பத்து மைல் தொலைவில் பிறந்த பெண் வரனாக அமைவாள். 2007-ல் திருமணம் கைகூடும். உறவு கிடையாது. நாகதோஷம் உள்ள வரனைப் பார்க்கவும். தற்போது சந்திரதசை நடப்பதால் குழப்பம் இருக்கலாம். இது தற்காலிகமானது.

**• எனது மகனுடைய திருமணம் உறவிலா, அசலிலா?**

**- அ.சேஷாசலம், குருங்குளம்**

உங்கள் பையனுக்கு 35 வயதில் 22.2.2007-க்குள் திருமணம் நடக்கும். அசலில் காரியம் கைகூடும்.

பொய்கையாழ்வார் ஏற்றியது மிகப்பெரிய விளக்கு. அந்த அளவுக்கு விளக்கேற்ற முடியாத பூதத்தாழ்வார், 'என்னால் முடிந்த விளக்கை ஏற்றிப் பார்க்கிறேன்' என்கிறார்.

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா -
நண்புகழ்சேர்
ஞானச்சுடர் விளக்கேற்றினேன்
நாரணற்கு
ஞானத் தமிழ் புரிந்த நான்.

(தகளி - மண்விளக்கு, நன்புகழ் சேர் - குறையற்ற புகழ்கொண்ட, நாரணன் - நாராயணன், விஷ்ணு)

அன்பை ஓர் அகல் விளக்காக்கி, அதில் ஆர்வத்தை நெய்யாக ஊற்றி, சிந்தனையைத் திரியாகப் பற்ற வைத்தால் ஏற்படும் ஞானம் அல்லது தரிசனம் அல்லது காட்சி எப்படி இருக்கும் என்று யோசித்துப் பாருங்கள்.

# அன்பெனும் அகல்விளக்கு!

உலகில் உள்ள அத்தனை சிந்தனை பூர்வமான விஷயங்களுக்கும் இம்மாதிரியான விளக்கு ஒன்று தேவைப்படும். எந்த விஷயத்தையுமே அறிய முயற்சி செய்வதற்கு அதை நாம் நேசிக்க வேண்டும்; அதன்மேல் அன்பு செலுத்த வேண்டும். அதோடு அதில் ஆர்வம் வேண்டும். ஆர்வம் என்றால் enthusiasm. ஈடுபாடு, பிடிவாதமான தேடல், இவற்றுடன் சிந்தனா சக்தியும் சேர வேண்டும். அப்படிச் சேர்ந்துவிட்டால், நாராயணன் கொடுப்பது ஞானம், அறிவு, காட்சி வெளிப்பாடு (revelation).

## சுஜாதா

எந்தத் தரிசனத்துக்கும் இரண்டு வகை விளக்குகளையும் ஏற்ற வேண்டும். தத்துவம், ஞானம் என்னும் இரண்டு வகை விளக்குகள்தாம் அவை. பொய்கையாழ்வார் ஏற்றியது தத்துவவிளக்கு; உலகளாவிய தத்துவம். பூதத்தாழ்வார் ஏற்றியது ஞானவிளக்கு.

இவ்விரண்டு விளக்குகளையும் ஏற்றும் போது தெரியும் காட்சி என்ன? அதை அடுத்த பாசுரத்தில் பேயாழ்வார் சொல்லக் கேட்போம்.

பூதத்தாழ்வாரின் இந்தப் பாடல் நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தில் 2182ஆம் பாடல். இரண்டாம் திருவந்தாதியின் முதல் பாசுரம். பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் மூவரையும் முதலாழ்வார்கள் என்று சொல்கிறார்கள். இது என்ன பெயர்கள் பேய், பூதம் என்று. இம்மூவரையும் பற்றிச் சரித்திரக் குறிப்புகள் ஏதும் இல்லை. மூன்றுமே கற்பனைப் பெயர்களாக இருக்கலாம். பொய்கையாழ்வார் ஒரு தாமரைப் பொய்கையில் அவதரித்தார் என்றொரு கதை உண்டு. பேயாழ்வார் கோயில், சென்னை மைலாப்பூரில் உள்ளது. மூவரும் சமகாலத்தவர்கள். சன்னியாசிகளா? ரிஷிகளா? எதுவும் தெரியவில்லை. அவர்கள் எழுதிய முந்நூறு அற்புதமான பாசுரங்களின் மூலம்தான் அவர்களை அறிய முடிகிறது.

(படிக்கலாம்)



# பின்தொடரும் ரகசிய உருவம்!

இரண்டாம் உலகப் போரின் போது, காயமடைந்த இராணுவ வீரர்களை ஒரு கூடாரத்துக்குள் வைத்து வைத்தியம் பார்த்துக்கொண்டிருந்தார்கள். ட்யூட்டி டாக்டர் ரவுண்ட்ஸ் போய்க்கொண்டிருந்தார். அப்போது திடீரென்று ஒரு இராணுவ வீரன் கத்தத் தொடங்கினான்.

“ஐயோ! என்னால காலை அசைக்கவே முடியலே... உயிரே போயிடும் போல இருக்கு!”

விழுந்தடித்துக்கொண்டு ஓடிய அந்த டாக்டர் அவசர அவசரமாகப் போர்வையை விலக்கிப் பார்த்தார். அதிர்ந்தே போனார். காரணம் அந்த நோயாளிக்கு இரண்டு கால்களுமே இல்லை.

“என்ன டாக்டர் பார்த்துக்கிட்டு இருக்கீங்க? ஏதாவது செய்யுங்க. இடக் கால்கட்டை விரல் பக்கத்துல பேய்த்தனமா வலி!” என்று அவன் அலற, டாக்டர் குழம்பிப் போனார். பிற்காலத்தில், இந்த விசித்திர நோய்க்கு Phantom Limbs என்று பெயரிட்டனர்.

இப்படி, மருத்துவ உலகை நடுங்க வைத்த பல பிரச்னைகள் உள்ளன. மாடியிலிருந்து ‘குதி’ என்று காதுக்குள் வந்து யாரோ கட்டளையிடுவார்கள். சொல் பேச்சு தட்டாமல் நல்ல பிள்ளையாகக் குதித்துச் செத்துப் போவார்கள். கடவுள் அல்லது சாத்தான் அல்லது வேறு என்னவோ வந்து தொடர்புகொள்ளும்; எதையாவது செய்யச் சொல்லும். சொன்னபடி செய்வார்கள் - கொலை உள்பட! கேட்டால், ‘நான் தேவ தூதனின் குமாரன்’ என்று விட்டத்தைப் பார்த்துக்கொண்டு அறிவிப்பார்கள்.

தனியாகப் பேசுவார்கள்; சிரிப்பார்கள்; காற்றில் வாளைச் சுழற்றிச் சண்டை போடுவார்கள்; நாய்க் குட்டி



யிடம் மனம்விட்டுப் பேசி அழுவார்கள்; பயமுறுத்துவதுபோல் எதையாவது சொல்வார்கள்.

மேற்படி சமாசாரங்கள் எல்லாமே ஆவியுலகம் சம்பந்தப்பட்டவையாக நீண்ட காலத்துக்கு இருந்தன. செய்வினை, மாயம், மந்திரம் என்று என்னென்னவோ செய்து பார்த்தார்கள். பேய் ஓடவில்லை.

'நேச்சர்' இதழில் சமீபத்தில் ஒரு கட்டுரை வெளிவந்துள்ளது. எழுதியவர் டாக்டர் பிளாங்க். இருபத்திரண்டு வயதுப் பெண் ஒருவர் இவரைத் தேடி வந்திருக்கிறார். அந்தப் பெண்ணின் பிரச்னை இதுதான். நிழல் போல் ஓர் உருவம் இவர் எங்கே சென்றாலும் இவர் பின்னாடியே போகிறதாம்! இவர் காரில் போனால், அந்த உருவமும் கூடவே ஏறிக்கொள்கிறது; இவர் குளிக்கப் போனால் கூடவே குளிக்கிறது; கடலை மிட்டாய் வாங்கிச் சாப்பிட்டால் அதுவும் கூடவே இருந்து சாப்பிடுகிறது.

"அந்த உருவம் எப்படி இருந்ததும்மா?"

"சரியாகச் சொல்லத் தெரியலே டாக்டர். மங்கலா, ஊதுவத்திப் புகை மாதிரி இருந்துச்சு. எனக்கு ரொம்பப் பயமா இருக்கு."

"பயப்படாதம்மா. வேற ஏதாவது வித்தியாசமா தோணுதா?"

"சில சமயம் என் உடம்பைவிட்டு நான் வெளியே போயிடற மாதிரி இருக்கு. வானத்துல பறக்கிற மாதிரி இருக்கு."

அந்தப் பெண்ணை ஆசுவாசப்படுத்தி, படுக்க வைத்து, அவள் மூளையின் இடப் பக்கத்தில் எலெக்ட்ரோடுகளை நட்டு வைத்தார். சுவிட்சைத் தட்டியதும் மெலிதான மின்சாரம் அவளது மூளைப் பிரதேசத்தில் பாயத்தொடங்கியது. கம்ப்யூட்டரைப் பார்த்து, ஒவ்வொரு பகுதியாக உரச ஆரம்பித்தார். ஒரு குறிப்பிட்ட பகுதியைத் தீண்டும் போது அந்தப் பெண் விழித்துக்கொண்டாள்.

"ஆங்... இப்போ என்னால அந்த உருவத்தைப் பார்க்க முடியுது."

எழுந்து உட்கார்ந்தாள். "என் கூடவே அந்த உருவமும் எழுந்து உட்காருது டாக்டர். வலக் கையை அசைத்தால், அதுவும் கையை ஆட்டுது டாக்டர்." தலைமுடியைக் கோதிக்கொண்டே முட்டிக்கால் போட்டு உட்கார்ந்தாள். "டாக்டர், நான் செய்யற ஒவ்வொரு வேலையையும் அந்த உருவம் செய்யுது."

தீண்டுவதை விட்டுவிட்டால் அந்த உருவமும் சும்மாவே இருந்தது. எல்லா வயர்களையும் கழற்றி விட்டு அந்தப் பெண்ணிடம் உட்கார்ந்து பொறுமையாகப் பேசினார் டாக்டர் பிளாங்க்.

அந்தப் பெண்ணால் நம்ப முடியவில்லை. ஆனால் உண்மை இதுதான்: தன்னுடைய உடலை வேறு ஓர் உடலாக அவளால் பார்க்க முடிந்திருக்கிறது. அவளது யோசிக்கும் பகுதி - அதாவது மூளை, அவளது உடலை விட்டுத் தனியாகக் கழன்று அவளைக் கண்காணித்திருக்கிறது. தான் பார்ப்பது தன்னுடைய உடலைத்தான் என்று அவளால் உணர முடியவில்லை. காரணம் மூளையில் ஏற்பட்ட சில பல கலகங்கள்.

"இப்படி ஏதாவது வித்தியாசமாகத் தோன்றினால் டாக்டரைச் சென்று பார்த்தால் எல்லாருக்கும் நல்லது" என்கிறார் டாக்டர் பிளாங்க். Neuro Scientists என்று ஒரு தனிப்பிரிவே இதற்காக இயங்கிக் கொண்டிருக்கிறது.



பொதுவாக நன்றாக இயங்கும் மூளை, சிலரை மட்டும் கஷ்டப்படுத்துகிறது. தன்னிச்சையாக இயங்கி நிறைய தப்புத் தண்டா செய்கிறது; கண்டதை யோசிக்க வைக்கிறது; காணும் காட்சிகளைத் தப்புத் தப்பாகப் புரிந்து கொள்கிறது. இப்படியெல்லாம் அந்த மூளை ஏன் செய்ய வேண்டும் என்பதற்குத் திட்டவட்டமான ஒரு பதிலை இன்னமும் கண்டுபிடிக்க முடியவில்லை.

- மருதன்

# போட்டிக்கதை

## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதை

# மதி-மதிப்பு

பதினெட்டாவது மாடி அறை ஜன்னலில் இருந்து பார்த்தபோது கோலாலம்பூரின் ஸ்கைலைன் வித்தியாசமாக இருந்தது.

தூரத்தே மேகப் பின்னணியில் இரட்டைக் கோபுரங்கள்...

கீழே விழிக்க ஆரம்பித்த சுறுசுறுப்பில் நகரம்...

இண்டர்காம் ஒலித்தது.

'யாரு... அரவிந்தனா? இருக்காதே... ஏழு மணிக்குத்தானே வருவதாகச் சொல்லியிருக்கிறான்...' சற்றே வியப்புடன் பாலகுரு எடுத்தார்.

வரவேற்புப் பெண் அவரைத் தேடி இருவர் வந்திருப்பதை அறிவித்தாள்.

'என்னடா இது... ஆபீஸ் விஷயமா மலேஷியா வந்து நாலுநாள்தான் ஆறது... இதோ... இன்னும் கொஞ்ச நேரத்தில் சிங்கப்பூர் போய் விட்டு மாலையில் சென்னைக்கு விமானம் ஏற வேண்டும்... அதற்குள்ளே நம்மைத் தேடி யார்...?' என்ற வியப்புடன், ஓர் எச்சரிக்கையுணர்வுடன் அவர்களை அறைக்கு அழைக்காமல் தானே வரவேற்பறைக்கு விரைந்தார்.

"வணக்கம் சார்..." கைகூப்பிய இருவரில் ஒருவனை உடனே அடையாளம் தெரிந்தது.

"என்னப்பா முருகையா... எங்கே விடியக்காலமே..."

"சார்... இவன் என் சிநேகிதன்... என் ரூம்லதான் தங்கிருக்கான்... சம்பத்ராஜ்னு பேரு..." சுருக்கமாக அறிமுகம் செய்து வைத்துவிட்டு...

"சார், உங்களால ஒரு சின்ன உதவி ஆகணும் சார்..." என்றான் முருகையன் குழைவாக.

ஒருமாதிரி உணர்ந்தார் பாலகுரு- ஊருக்கு ஏதாவது கொடுத்தனுப்புவான் என்று.

ஆனால் அவன் கையில் ஒரு சாமானையும் காணோமே!

"அன்னைக்குக் கேண்டீன்ல விழுந்து விழுந்து உபசாரம் செஞ்சுட்டு இன்னைக்கு உதவி கேட்டு வந்





துட்டானேன்னு நெனைச்சுக்காதீங்க சார்..."

அப்படித்தான் நினைக்க ஆரம்பித்திருந்தார்.

அன்று அவர் அலுவலக விஷயமாகச் சென்றிருந்த கம்பெனியின் கேண்டீன் அது...

"நீங்களும் நம்ம ஊர்ப் பக்கம்தான்னு தெரிஞ்சு எத்தனை சந்தோஷமாயிருக்கு தெரியுமா சார்..." என்றபடி, அவரும் அரவிந்தனும் சாப்பிட்ட பில்லைத் தம் கணக்கில் போடச் சொல்லிவிட்டான் முருகையன். அவன் என்ன சொல்லியும் கேட்கவில்லை...

"இங்க பாருப்பா... எனக்கு எல்லாம் எங்க ஆபீசுல குடுத்துடுவாங்கப்பா..."

"நல்லாருக்கே. நீங்க நமக்கு வேண்டியவரு..."

'அன்று உபசரித்தவனுக்கு இன்று என்ன உதவி...?'



"நேத்துதான் சார் ஊர்லேருந்து போன் வந்திச்சு... எனக்கு மூத்த மக இருக்கான்னு சொன்னேன்ல, அது சடங்காயிடுச்சாம்..."

வெட்கமும் சந்தோஷமும் அவன் முகத்தில் பரவின.

"நான் ஊரைவிட்டுக் கிளம்பறப்ப ஏழெட்டு வயசுக் குட்டியா... தூங்கிக்கிட்டிருந்திச்சு... இன்னைக்கு என்னடான்னா..." வியப்பாகச் சிரித்தான்.

"பெரிய மனுஷி ஆயிருச்சாம்..." கண்களில் தம் மகள் எப்படியிருப்பாள் என்ற ஆவல் மிதந்தது...

பின்னர் உணர்வு பெற்றவனாய்,

"சார், வேறொண்ணுமில்லீங்க... அதுக்கு ஞாயித்துக்கெழமை நீராட்டு விழா வச்சிருக்காளாம் என் சம்சாரம் என்னால ஆனதை குழந்தைக்குச் செய்ய வேண்டாமா சார்..." என்றவன், தம் சட்டைப் பையில் கையைவிட்டு ஒரு சிறிய கவரை எடுத்தான்.

பிரித்துக் காட்டினான்.

பளபளவென்று ஒரு தங்கச் சங்கிலி...

"நேத்து வீட்டுலருந்து போன் வரவும் எனக்கு என்னா பண்றதுன்னே தெரியல சார்... சந்தோஷம் ஒரு பக்கம்... கவலை ஒரு பக்கம்னு... கைல காசும் கிடையாது. அப்புறம் இந்த சம்பத்தான் எங்கியோ தெரிஞ்ச இடத்துல பணம் வாங்கிக் கொடுத்தான். இந்தச் சங்கிலியத்தான் என் பொண்ணுக்கு வாங்கிருக்கேன் சார். பவுன் விக்கிற வெலயில அறுநூறு

பத்மினி பட்டாபிராமன்

வெள்ளிக்கு மேலேயே ஆயிருச்சு சார்... இருந்தாலும் என் குழந்தைக்குப் போட்டா எவ்ளோ அழகாயிருக்கும் தெரியுமா..." கற்பனையில் அவன் பெண் கழுத்தில் அந்தச் செயினைப் போட்டுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"ஏம்ப்பா... தங்கச் சாமானைக் கொடுக்கறே... எனக்கு கஸ்டம்ஸ்ல பிரச்னை வந்தா..."

சம்பத் குறுக்கிட்டான்.

"அதெல்லாம் வராது சார். உங்க கைப்பையிலேயே வச்சுக்கலாம். வேணா கடை பில்லையும் வச்சுக்குங்க. பில்லக் குடு முருகு..."

பாலகுரு தயங்கினார்.

"ப்ளீஸ் சார்... நான் உங்களைத் தொந்தரவு பண்றதா நெனைக்காம எடுத்துட்டுப் போங்க. என் குழந்தைக்காக சார். ப்ளீஸ்..." கும்பிட்டான்.

அரை மனசுடன் சம்மதித்தார்.

"இந்தாங்க சார். போன் நம்பர்... நீங்க சென்னைக்குப் போனதும் இந்த நம்பருக்கு போன் பண்ணுங்க; என் சம்சாரமே வந்து செயினை வாங்கிப்பா. எங்க வீட்டாண்டை இருக்கிற ஒரு மெடிக்கல் ஷாப் நம்பருங்க...என் சம்சாரம் பேரு ராஜேஸ்வரி..."

"எதுக்கும் உன் அட்ரஸ் கொடுப்பா..." கொடுத்தான்... ஏதோ ஊரப்பாக்கம் கோடியில் ஒரு முகவரி.

ஆயிரம் நன்றிகள் சொன்னபின் தயங்கினான்.

"என்னப்பா..."

"வந்து... சார்... நான் ஒரு டிரான்ஸ்போர்ட் கம்பெனியில வேலை செய்யறதாத்தான் சொல்லியிருக்கேன். சர்வர் வேலைன்னு சொல்லலே... இங்க கஷ்டப் படறதெல்லாம் அவங்களுக்குத் தெரிய வேணாம் சார்..." கலங்கிய கண்களுடன் கும்பிட்டான்.

**செ**ன்னை வந்துவிட்டார் பாலகுரு. சனிக்கிழமை காலையிலிருந்து பலமுறை அந்த மெடிக்கல் ஷாப் நம்பருக்கு போன் செய்தார். ஒரு கரகரகுரல் கிடைத்தது.

"ராஜேஸ்வரி அம்மா வீட்டுல யாருமே இல்லீங்க" என்று மட்டும் சொல்லிவிட்டு வைத்துவிட்டது.

மறுநாள் ஞாயிற்றுக்கிழமை காலை...

பக்கத்து வீட்டு நண்பரையும் அழைத்துக்கொண்டு புறப்பட்டார்.

கிட்டத்தட்ட இரண்டு மணி நேரம் கழித்து முருகையன் முகவரியில் குறிப்பிட்டிருந்த தெருவை அவர்கள் அடைந்தபோது வெயில் மேலே ஏறியிருந்தது.

'ஃபாத்திமா மருந்துக் கடை' என்று பக்கச் சுவரிலேயே பெரிதாகப் பெயிண்ட் எழுத்துகள்... மருந்துக் கடைக்குள் இருந்த பெரிய மனிதனிடம் விசாரித்தார்கள். அவர் சுட்டிக்காட்டியது ஓர் ஓலை வீட்டை...

திண்ணையில் கிராமத்து மனிதர் ஒருவர் அரைத் தூக்கத்தில் படுத்திருந்தார். பைக்கையும் நாகரிகமான இருவரையும் பார்த்து விழித்தவர்,

"அல்லாம் சத்திரத்துக்குப் போயிருக்காங்க..." என்றார்.

> **பா**வனாவுக்கும் நடிகர் அப்பாஸுக்கும் ஓர் ஒற்றுமை உண்டு. இரண்டு பேருமே இடக்கைப் பழக்கமுள்ளவர்கள். பாவனாவிடமுள்ள இன்னொரு பழக்கம் ஷூட்டிங்குக்குத் தாம் கொண்டு வரும் வஞ்சிர மீன் வகைகளை தாம் மட்டும் சாப்பிடாமல் யூனிட்டில் எல்லோருக்கும் கொடுத்து டேஸ்ட் பண்ணச் சொல்வாராம்!

"யாருங்க வேணும்..." என்று வலிய வந்து கேட்ட ஒரு கடைக்காரப் பெண்மணி,

"பொண்ணுக்குப் பூச்சுட்டு நடக்குதுல்ல... எல்லாம் தாம்பரத்துல ஒரு மண்டபம் எடுத்து நடத்துறாங்க... " என்று அழைப்பிதழ் ஒன்றை நீட்டினார்.

பத்திரிகை அமர்க்களமாய் இருந்தது... தாம்பரத்தில் ஒரு கல்யாண மண்டபம்.

"போயி குடுத்திடலாம் வாங்க, பாலகுரு..."

**ம**ண்டபத்துக்கு இவர்கள் போனபோது உச்சி வெயில். சாப்பாடு நடந்து கொண்டிருந்தது... ஏகக் கூட்டம்... மேடையில் ஒரு பூப்பல்லக்கு அன்ன வடிவத்தில் அலங்காரம் செய்யப்பட்டு, நடுவில் அந்தச் சிறு பெண் உட்கார்ந்திருந்தாள்.

"அம்மா... குழந்தை..."

அருகிலிருந்த நடுத்தர வயதுப் பெண்

மணி சிரித்த முகத்துடன் இவர்களை நோக்கி வந்தாள்.

"நீங்க...?"

"நான்தான் ராஜேஸ்வரி..."

"உங்க வீட்டுக்காரர்..." என்று பாலகுரு ஆரம்பிக்கும்போதே...

"வாங்க, வாங்க, நீங்க கோலாலம்பூரில் இருக்கீங்களா?" ஆவலாய்க் கேட்டாள். முதலில் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார்.

"சரி... அவுரு என்ன குடுத்திருக்காரு..."

பையிலிருந்து செயினை எடுத்து நீட்டினார்.

ஆவலோடு வாங்கிக்கொண்டு மேலும் கீழுமாக அதை வைத்துப் பார்த்தாள்.

"அப்புறம்...?" என்று கையை நீட்டினாள்.

"அவ்வளவுதானுங்க..."

"என்னது... அவ்...வளவுதானா?". அவள் முகமே மாறியது.



"இதையா தூக்கிக்கிட்டு இவ்வளவு தூரம் வந்தீங்க?" செயினை ஒரு பெட்டி மேல் எறிந்தாள்.

"ஏங்க... வட்டிக்குக் கடன் வாங்கி இத்தனாம் பெரிய மண்டபத்துல இத்தினி பேரைக் கூப்பிட்டு விருந்து, துணி மணின்னு பண்றேன்... அந்த மனுஷன் பணம் கொடுத்தனுப்பலே...?"

நண்பர்கள் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர்.

"இல்லைங்க... வந்து..."

"என்னா இல்லைங்க...? மலேஷியாவுல மனுசன் நாலு வருஷமா பெரிய மோட்டார் கம்பெனில வேலை பார்த்து என்னத்தைக் கிழிக்கிறான்? ஈர்க்குச்சி மாதிரி ஒரு செயின்தான் கெடச்சுதா? சொந்தக்காரங்க எல்லாம் எங்களை இப்பத்தான் ஓஹோன்னு மதிக்க ஆரம்பிச்சிருக்காங்க. பொண்ணுக்குப் பூச்சூட்டு செய்யணும் பணம் அனுப்புங்கன்னு போன்ல சொன்னேனே... அனுப்பலே அந்த மனுஷன்.. இங்க இருந்தப்பதான் கைல காசு கிடையாது... இப்பவாவது மனசு வந்து அனுப்பினா என்னா... கருமி..கருமி..."

இரண்டு கைகளையும் தலைமேல் வைத்துக்கொண்டு உட்கார்ந்து அவள் புலம்ப ஆரம்பிக்க, இருவரும் மெள்ள நழுவி வெளியே வந்தார்கள்.

பாலகுருவின் செல்போன் ஒலித்தது. ஐ.எஸ்.டி.. நம்பர்!

"எஸ்..."

கொஞ்சம் கசமுச குரல்களுக்குப் பின், "சார், நான்தான் முருகையன்... என் சம்சாரம் வந்து வாங்கிட்டுப் போனாங்களா சார்..."

"அவுங்க வரலே முருகையன்... நானே தான் கொண்டு போய்க் கொடுத்தேன்..."

பாலகுருவுக்குத் தொண்டை அடைக்க ஆரம்பித்தார்.

அவர் மனைவி ஜானகி 'சொல்லிடுங்க' என்று சைகை செய்தார்.

"சார்..."

"சாரி சார்... உங்களுக்குச் சிரமம்... நீங்களே போயிட்டீங்களா?" முருகையன் 'சாரி' சொன்னாலும் குரலில் சந்தோஷம் வழிந்தது.

"என் பொண்ணைப் பார்த்தீங்களா.... என் சம்சாரத்துக்குச் செயின் பிடிச்சிருந்திச்சா... பொண்ணு கழுத்துல போட்டாளா..." கேள்விகள்... ஆசையும் பாசமும் பொங்கி வழியும் கேள்விகள்.

ஏதோ ஒன்று நெஞ்சில் அடைத்தது பாலகுருவுக்கு.

"அ... உன் சம்சாரத்தைப் பார்த்தேன்... செயினைப் பொண்ணு கழுத்துல உடனே போட்டாங்க. உன் குழந்தைக்கு நல்லா யிருந்துச்சு..."

இதே வார்த்தைகளை பக்கத்தில் சம்பத்போல இருக்கிறது... அவனிடம் முருகையன் சந்தோஷமாகத் திருப்பிச் சொல்லிக்கொண்டிருந்த நேரத்தில், பாலகுரு செல்போனை அணைத்தார்.

## வட்டமேஜை

**நீ**ரிழிவு நோயின் நிதர்சனங்கள் கட்டுரை பயனுள்ளதாக இருந்தது. டாக்டர் பாலாஜியின் விளக்கங்கள், நீரிழிவு சம்பந்தப்பட்ட பல சந்தேகங்களுக்குத் தீர்வைக் கொடுத்தன.

**- கி.முகம்மது ஹஸன், திருச்சி**

**க**டந்த வார வட்டமேஜையில் விசாகா ஹரியின் கதையை நல்ல இசையின் நடுவே அபஸ்வரம் என்று விமர்சித்துள்ளார். இது ஸ்ரீ அண்ணாவின் அகில பாரத ஸாது சங்க பக்தர்களின் மனத்தில் மிகுந்த தாபத்தை ஏற்படுத்தியுள்ளது. கதா ப்ரவசனம் செய்பவர்கள் நடுவில் தங்கள் 'குரு' சொல்வதை மேற்கோள் காட்டுவது ஏற்புடையதே - அது சிஷ்யர்களின் பண்புமாகும்.

**- வி.சுப்ரமணியன், சென்னை**

**'ஓ**டாதே நில்' பாணியில் 'நிறுத்தாமல் செல்' என்று ரசிகர்கள் மானசீகமாக ஞானசம்பந்தன் அவர்களுக்கு விண்ணப்பித்தது அவர் காதில் விழும் முன் 'வெள்ளித்திரை'யில் 'சுபம்' போட்டுவிட்டாரே!

**- எஸ்.கோதை, மதுரை-2**

**கு**.ஞானசம்பந்தன் அவர்களின் 'சினிமாவுக்குப் போகலாம் வாங்க' கட்டுரைத் தொடர் 40 வாரங்கள் வெளிவந்து என்னை மகிழ்ச்சியிலாழ்த்தியது. மேலும் 60 வாரங்கள் ஏன் தொடரவில்லை என்று சொல்ல வைக்குமளவுக்கு என்னை வசியப்படுத்தி விட்டது.

**- கே.எஸ்.இழாம்பூர் ராமையா, மதுரை**



### சென்றவர்கள் பாக்யவான்கள்!

**'அ**ரசியல் கலக்காத அயோத்தி யாத்திரை...' படித்ததும் நானே நேரில் கலந்து கொண்ட திருப்தியை அளித்தது. சென்றவர்கள் பாக்யவான்கள்.

**- ராஜிராதா, திருச்சி**

**க**வர் ஸ்டோரியில் சென்னையிலிருந்து 350 பேர்கள் புறப்பட்டு 'ஸ்ரீ ராம அனுயாத்திரை' என்கிற புனிதப் பயணத்தில் கலந்து கொண்டதைப் படித்தபோது, நாமும் கலந்து கொண்ட திருப்தி ஏற்பட்டது.

**- ஆர்.பிருந்தா, மதுரை**

**டா**க்டர் சுதா சேஷய்யனின் 'ஸ்ரீலலிதா சகஸ்ரநாம விளக்க உரை' அம்பிகையை வழிபடும் நாட்களில் ஆரம்பமானது பொருத்தமே!

**- ஐ.எஸ்.சீனிவாசன், சென்னை-82**

**ரீ**ல் சுற்றும் எனும் தலைப்பில் ரியல் நிகழ்வுகளை 40 வாரங்களாக கல்கி வாசகர்களிடையே பகிர்ந்து பல அரிய நகைப்பூட்டும் செய்திகளை அள்ளித் தந்த கு.ஞானசம்பந்தன் அவர்களைப் பாராட்ட வார்த்தைகளே இல்லை.

**- வே.ஈஸ்வரன், இராஜபாளையம்**

**'சி**னிமாவுக்குப் போகலாம் வாங்க' என கு.ஞானசம்பந்தன் 40 வாரங்களாக, தமது அனுபவங்களையும் சேர்த்து புதிய ரீல்களாக்கி பெரியவர்களின் பெருமையையும் சேர்த்துச் சொல்லிய விதம் புதுமையாக இருந்தது.

**- சி.என்.ரமாதேவி, பொள்ளாச்சி**

# நீங்கள் கேட்டவை



● ஆர். லதா, தேவூர்

? 'தி.மு.க. கூட்டணியில் கருத்து வேறுபாடு இருக்கலாம்; ஆனால் இக் கூட்டணி மேலும் வலுப் பெறுமே யொழிய வலு இழக்காது'' என்று கருணாநிதி கூறியுள்ளது பற்றி தங்கள் பதில் என்ன....?

! அவ்வாறு அடிக்கடி சொல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டிருப்பதே வலு குறைந்து போனதன் அறிகுறிதான்.



* அபாயகர அறிக்கை!



* 'நரகாசுர' நாகரிகம்!

● எம். சிவகுருநாதன், தஞ்சை

? ''விடுதலைப்புலிகளை இந்துத் தீவிரவாதிகள் என்று ஏன் அழைப்ப தில்லை?'' என முஷாரஃப் கேட்கிறாரே?

! பயங்கரவாதத்தில் இந்து பயங்கர வாதம், முஸ்லிம் பயங்கரவாதம் என்ற வித்தியாசங்கள் கிடையாது. பயங்கர வாதம் எங்கு, எப்படி தலையெடுத்தாலும், அது கண்டனத்துக்குரியது; கட்டுப்படுத் தப்பட வேண்டியது. இதை முஷாரஃப் செய்யாததோடு, பயங்கரவாதத்தை ஊக்குவிக்கிறார்! இந்தக் குற்றச்சாட்டி லிருந்து தப்ப அவர் எதையெதையோ கூறிச் சமாளிக்க முயற்சி செய்கிறார். பரிதாபம்!

## பொய் சொல்வது — உண்மையை மறைப்பது — வித்தியாசம் என்ன?



* அபஸ்வர ஒப்பீடு!

● ஜே.துரைராஜ், சென்னை - 116

? 'ஸ்வாமியும் சிநேகிதர்களும்', 'மால்குடி நாட்கள்' ஆசிரியர் ஆர்.கே.நாராயணின் நூற்றாண்டு விழா குறித்து...?

! இல்லாத ஓர் ஊரை (மால்குடி) இருப்பதாக உலகையே நம்ப வைத்தவர். ஆங்கில இலக்கிய உலகில் முன்னணி வகித்த தென்னிந்தியர். அவருடைய படைப்புகள் பல நூற்றாண்டுகளைக் கொண்டாடும்.

— தராசு

● டி. முருகேசன், திருவாரூர்

***? கலைஞருக்குத் திரையுலகம் பாராட்டு விழா நடத்தியதை சன் டீ.வி.யில் ஒளிபரப்பிய அதே நேரத்தில், சில ஆண்டுகளுக்கு முன் அதே திரையுலகம் ஜெ.வுக்கு நடத்திய பாராட்டு விழாவை, ஜெயா டீ.வி.யில் ஒளிபரப்பியது பற்றி...?***

! அதிலிருந்த பல திரையுலகப் பெரும்புள்ளிகள் இதிலும் இருந்தது. திரையுலகம் ஷோ காட்டுவதை நிரூபித்தது. சினிமாவை ஒரு தொழிலாக, ஸ்டுடியோவை ஒரு தொழிலகமாக எண்ணினால் இந்த நாடகங்கள் இராது.



* 'வேஸ்ட்' யோசனை!



* வாழும் இலக்கியம்!

● கே.கே.வெங்கடேசன், சென்னை - 37

***? டீ.வி. பார்க்கும் பழக்கத்தை நிறுத்த ஓர் அருமையான யோசனை தேவை. தரமுடியுமா?***

! மிகச் சுலபமான வழி இருக்கிறதே - ஸ்விட்சை அணைப்பது! இது சரிப்பட்டு வரவில்லையானால் காலையில் ரேடியோ கேளுங்கள். உட்கார்ந்து பார்க்க அவசியம் இல்லை. கேட்டபடியே காலைக் கடமைகளை முடித்துக் கொள்ளலாம். நேரம் மிச்சமாகும். மாலையில், அரசியல் பொதுக் கூட்டம், இலக்கிய / கலை நிகழ்ச்சி என்று போய் வரலாம். சென்னையில் 'இலவச என்டர்டெய்ன்மென்ட்' நிறைய, நிறைய!

● எஸ். கோதை, மதுரை - 2 ★

***? மேடையில் இசைக் குயிலாய் அமர்ந்தவர், புடைவைத் தலைப்பை ஒயிலாய்க் காட்டி ஒசியும் மயிலாக நடமாடுகிறாரே - (சுதா ரகுநாதன் - போத்தீஸ் பரம்பராபட்டு விளம்பரம்)?***

! ஒயிலாய், மயிலாய் இருக்கட்டும். நாம் ஆட்சேபிப்பதற்கில்லை. "பாட்டு எவ்வளவு பிடிக்குமோ அவ்வளவுக்குப் பட்டும் பிடிக்கும்" என்ற வசனம்தான் பயங்கர அபஸ்வரம்! சங்கீதத்தையும் சேலையையும் சமச்சீராக அவர் கருதலாமா!

● எஸ். ராஜேஸ்வரி, போடிநாயக்கனூர்

***? உள்ளாட்சித் தேர்தலுக்கே இவ்வளவு செலவு செய்கிறார்கள் என்றால், வெற்றிபெறும் வேட்பாளர்களிடம் நாம் எப்படி நேர்மையை எதிர்பார்க்க முடியும்?***

! நேர்மை மட்டுமல்ல; நிர்வாகத் திறனையும் எதிர்பார்க்க முடியாது. புத்தி பூராவும் பணம் பண்ணுவதிலேயேதான் கரையும்.

● அ. அப்துல்காதர், விளாத்திகுளம்

***? "ராஜீவ் கொலை வழக்கில் தண்டனை பெற்ற நளினியை விடுதலை செய்யும் நிலை ஏற்பட்டால் அதற்காக மகிழ்ச்சி அடைவேன். ஆனால் அவரை விடுதலை செய்ய வேண்டும் என்று கோரிக்கை வைக்க மாட்டேன்" எனக் கருணாநிதி கூறுவதைப் பற்றி...?***

! புலிகளை நேரடியாக ஆதரிப்பதைக் காட்டிலும் அபாயகரமானவை இதைப் போன்ற பேச்சுக்கள்!

● என். கோதண்டராமன், மதுராந்தகம்

***? தமிழகத்தில் ரௌடிகளை ஒழிக்க, நூறு சப் இன்ஸ்பெக்டர்களைத் தேர்வு செய்து சிறப்புப் பயிற்சி அளிக்க வேண்டும் என்கிறாரே ராமதாஸ்?***

! ஊஹூம், வேஸ்ட்! அரசியல் செல்வாக்குலதான் அத்தனை ரௌடிங்களும் தழைக்கறாங்க என்னும்போது என்ன பயிற்சி இருந்து என்ன புண்ணியம்?

● ஜி.ஜெயராமன், கூந்தலூர் ❒

***? பொய் சொல்வது - உண்மையை மறைப்பது - வித்தியாசம் கூறவும்.***

! உண்மையை மறைப்பது: அக்தரும் அஸிஃப்பும் ஊக்க மருந்து உடலில் செலுத்திக்கொண்டு ஆட வந்தது. பொய் சொல்வது: "நான் குற்றமற்றவன்" என்று முதல்நாளும், "ஆஸ்துமாவுக்காக மருந்து

☐ ரூ 100 பரிசு
பெறுபவர் :
**ஜி. ஜெயராமன்,**
எரவாஞ்சேரி,
கூந்தலூர் 609 501

★ ரூ 50 பரிசு பெறுபவர் :
**எஸ்.கோதை.**
2, தெற்கு தெரு,
சிங்கராயர் காலனி,
மதுரை - 625 002

சாப்பிட்டேன்" என்று மறு நாளும் அக்தர் கூறுவது.

● **உ.குணசீலபாண்டியன், இராஜபாளையம்**

***? தி.மு.க. கூட்டணியில் ஏற்பட்டுள்ள சிராய்ப்புக்குக் காரணம் கருணாநிதியா, தா.பாண்டியனா?***

! உள்ளாட்சித் தேர்தலில் தொகுதி உடன்பாடு அனைவருக்கும் திருப்திகரமாக அமையாமல் அலட்சியமாக விட்டது கருணாநிதியின் அடிப்படைத் தவறு. இதனால் தோழமைக் கட்சிகளுக்கிடையிலேயே போட்டி; வன்முறை. அதனைக் கட்டுப்படுத்த முடியாமல் போனது கருணாநிதியின் இரண்டாவது தவறு. விளைவு: சிராய்ப்பு - மனக் கசப்பு!

● **எம்.ஜோதிகுமார், சென்னை - 106**

***? வோட்டுப் போடாதவர்களின் ரேஷன் கார்டுகளைப் பறிமுதல் செய்து அபராதம் விதிக்கும் சட்டத்தைக் கொண்டு வர வேண்டுமென பா.ம.க. நிறுவனர் ராமதாஸ் கூறியுள்ளாரே?***

! வோட்டுப் போட்ட மக்களின் கல்வி, பொருளாதாரத்தை உயர்த்தாமல் ஐந்து ஆண்டுகளையும் கழித்துவிடுகிற ஆட்சியாளர்களிடமிருந்து எதைப் பறிமுதல் செய்வது என்பதையும் சொல்லியிருக்கலாம்.



★ சமாளிப்பு முயற்சி!



★ 'ஊக்கமான...'



★ .... பொய்!

● **அ.யாழினி பர்வதம், சென்னை**

***? ஐ.நா. தேர்தலிலிருந்து சசி தரூர் விலகல் பற்றி...?***

! அமெரிக்கப் பெரியண்ணனின் அழுகுணி ஆட்டம்.

● **உமரி பொ.நாராயணன், மும்பை - 37**

***? வயதானவர்கள் நரையை மறைக்கத்தான் வேண்டுமா?***

! வேண்டாம் - முதுமையை ஏற்கும் பக்குவம் இருந்தால். தலைக்கு 'டை' அடித்து மறைக்கலாம்; உடல் தளர்வுக்கு என்ன செய்ய?!

● **கு. ஜெயபாலன், மதுரை - 4**

***? கருணாநிதி கடந்த ஆட்சியில் கவனிக்காமல் விட்ட கோப்புகளைப் பற்றிய தகவலை அரசியல் நாகரிகம் கருதி வெளியிடவில்லை என்று ஜெயலலிதா கூறியுள்ளது பற்றி உங்கள் கருத்து என்ன...?***

! அடேயப்பா! அப்படியானால் தி.மு.க.வையும் அதன் 'நரகாசுரன்' தலைவரையும் வதைத்துத் துவம்சம் செய்ய அறைகூவல் விடுத்தது எந்த நாகரிகத்தில் சேர்த்தியாம்!

# காக்கும் மஹாராணி!

சுதா சேஷய்யன்

அடுத்த திருநாமம் **ஸ்ரீ மஹாராக்ஞி** - ஸ்திதி - காப்பாற்றுகிற தொழில். மஹாராக்ஞி என்று சொன்னால் என்ன அர்த்தம்...?

எப்பொழுதுமே படைப்பதைவிட காப்பாற்றுவது கஷ்டம். ஒன்றும் வேண்டாம். கோலத்தை அழகாகப் போட்டு விடலாம். பத்து நிமிஷம் அந்தக் கோலத்தை அங்கே இங்கே பிசகாமல் காப்பற்றுவது எவ்வளவு கஷ்டம்! யாராவது "கோலம் அழகாக இருக்கிறதே..." என்று ரசிப்பதற்காக நடந்து சுற்றி வந்தால்கூட இழை கலைந்து மாறிவிடும்!

ஆகவே, காப்பாற்றுவது என்பது ரொம்ப கஷ்டமான செய்கை. ஆம், இருப்பதிலேயே ரொம்ப கஷ்டமான விஷயம் அதுதான். ஆனால், படைத்த இந்தக் குழந்தைகளையெல்லாம், இந்த ஆன்மாக்களையெல்லாம் காப்பாற்ற வேண்டும் என்பதற்காக, பல விதங்களில் தன்னை ஆட்படுத்திக் கொள்கிறாளே அம்பிகை - அப்படி ஆணையிட்டுக் காப்பாற்றக் கூடியவள் என்பதனாலே அவள் **மஹாராக்ஞி.** மஹாராணியாக இருக்கக் கூடியவள்.

ஒரு நாட்டை யார் காப்பாற்றுகிறார்கள் என்றால் அரசர்களாக, ஆட்சியாளர்களாக இருந்து பரிபாலனம் செய்பவர்கள் காப்பாற்றுகிறார்கள். ராஜராஜசோழன் பரிபாலித்தான் என்று சொல்வோம். ஒரு நாட்டைப் பரிபாலித்துக் காப்பவனே பேரரசன் என்று சொன்னால், இவ்வளவு பெரிய சிருஷ்டியிலுள்ள இவ்வளவு உயிர்களையும் காப்பாற்றக் கூடியவள் அவள்! அவள் மஹாராணியாக இருந்து காப்பாற்றுகிறாள். அதனால் இந்தத் திருநாமம் ஸ்திதியை - காத்தலைக் காட்டக் கூடிய திருநாமம்.

## ஸம்ஹாரி

அடுத்து வரக்கூடிய திருநாமம் **ஸ்ரீமத் சிம்ஹாஸனேசுவரி.** இந்தத் திருநாமத்துக்குத் தனியொரு அழகு உண்டு.

சில சொற்கள் இப்படிச் சொன்னாலும் ஓர் அர்த்தம் வரும்; அதையே திருப்பிச் சொன்னாலும் ஓர் அர்த்தம் வரும். இந்தச் சொல்லைச் சொல்லும்போது சிம்ஹாஸனத்தில் அமர்ந்து கொண்டிருக்கக் கூடியவள் என்று பொருளாகிறது.

சிம்ஹாஸனத்தில் அமர்ந்துகொண்டிருக்கக் கூடியவள் என்ன செய்கிறாள் என்று கேட்டால், முந்தைய திருநாமம்தான் பொருந்தி வரும். மஹாராணியாக இருக்கக்கூடியவள்தான் சிம்ஹாசனத்தில் அமர்ந்திருக்கிறாள்.

'அவ்வாறு சிம்ஹாஸனத்தில் அமர்ந்திருப்பது எவ்வாறு 'சம்ஹாரம்' என்கிற தொழிலுக்குப் பொருந்தி வரும்?' என்கிற கேள்வி வரலாம்.

சிம்ஹாஸனேசுவரி என்பதைக் கொஞ்சம் புரட்டிப் பார்த்தால் சம்ஹரிக்கக் கூடியவள் - சிம்ஹாஸனியே 'ஸம்ஹாரி' என்று பொருள் வரும்.

அதனால் இந்த மூன்று திருநாமங்களையும் சேர்த்துப் பார்க்கிறபோது சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரத்தைச் சொல்கின்றன.

இந்த மூன்றும் வந்தாயிற்று... மூன்று தொழில்கள் முடிந்தாகிவிட்டன.

நான்காவது திருநாமத்தில் ஆரம்பித்து 999-ஆவது திருநாமம் வரை எதைச் சொல்கின்றன...?

அப்பைய தீக்ஷிதரும் கோடகநல்லூர் சுந்தர சுவாமிகளும் என்ன சொல்கிறார்கள் என்றால், இந்த நான்கு முதல் 999 வரையிலான திரு

நாமங்கள் அனைத்தும் திரோபாவத்தையும் அனுக்கிரஹத்தையும் காட்டக்கூடிய திருநாமங்கள் என்கிறார்கள்.

பந்தத்தைக் கொடுப்பது திரோபாவம்; பந்தத்தை அழிப்பது அனுக்ரஹம். இவை இரண்டையும் சேர்த்துச் சொல்லக் கூடியவைத்தான் மீதமிருக்கக்கூடிய பெரும்பாலான திருநாமங்கள்.

கடைசியில் இருக்கிற திருநாமம் இருக்கிறதே, லலிதாம்பிகா என்கிற திருநாமம்... மற்ற 999 திருநாமங்களையும் பாராயணம் செய்ததனால், அந்த அம்பிகையை அப்படியே ஆத்ம ஸ்வரூபமாக உணர்கிற பரிபூரண ஆனந்த நிலைமையைக் காட்டக்கூடிய திருநாமம் பிகா.

ஆக, ஐந்து தொழில்களையும் சொல்லி, கடைசியில் இந்த ஐந்துக்கும் அப்பாற்பட்டு, அனுக்ரஹத்தில் போய் அம்பாளுடன் இரண்டறக் கலந்துவிடுகிற நிலைமை இருக்கிறதே - அந்தப் பரமானந்தத்தைக் காட்டக்கூடியதுதான் லலிதாம்பிகா என்கிற கடைசி திருநாமம்.



## மேல்நாட்டு உபாஸகர்!

இந்தத் திருநாமங்களின் முறைக்கு ஒரு விளக்கம் உண்டு. ஆயிரம் திருநாமங்களையும் ஆயிரம் ஜன்மங்கள் என்ன... எத்தனை கோடி ஜன்மங்களை எடுத்தாலும் முழுமையாகச் சிந்திக்க முடியாது. பாஸ்கரராயர் வேண்டுமானால் 64 கோடி யோகினிகளின் திருப்பெயர்களையெல்லாம் சொல்லியிருக்கலாம். ஆனால், எத்தனை கோடி ஜன்மங்களை எடுத்தாலும் நாம் இந்த ஆயிரம் திருநாமங்களையும் முழுமையாகச் சிந்திக்க முடியாது. எனவே, சில திருநாமங்களை மட்டும் நாம் முறையாகச் சிந்தித்துப் பார்ப்போம்.

தொடக்கத்தில் வரக்கூடிய திருநாமங்களில் இன்னொரு அழகையும் பார்க்கலாம். இவை எல்லாம் அம்பிகையின் ஸ்வரூபத்தை வர்ணிக்கிற மாதிரி வரக்கூடிய திருநாமங்கள். ஒரு விசேஷத்தைக் கொஞ்சம் யோசிக்க வேண்டும். பிற்காலத்தில் அம்பிகை மீது பல கிரந்தங்கள் (நூல்கள்) இயற்றப்பட்டன. பல அம்பாள் உபாஸகர்கள் வந்தார்கள். அம்பாள் உபாஸனையினுடைய பெருமை என்னவென்றால், இந்தத் தேசத்தைச் சேர்ந்தவர்கள் மட்டுமல்லர், காந்தாரத்திலிருந்து காமரூபம்; கேதாரத்திலிருந்து இராமேசுவரம் என்று மட்டுமல்ல... இந்த மண்ணில் பிறக்காதவர்கள்கூட அம்பாள் உபாஸகர்களாக இருந்து, அந்த உபாஸனையினால் கிடைத்த பெருமைகளையெல்லாம் உணர்ந்து, அவர்களே எழுதியிருக்கக்கூடிய கிரந்தங்கள் ரொம்ப விசேஷமானவை.

சௌந்தர்யலஹரியைப் பற்றியும் அம்பாள் உபாஸனையைப் பற்றியும் ஆர்தர் ஆவலான் என்ற மேல்நாட்டு அறிஞர் முழுக்க முழுக்க சமஸ்கிருதத்தில் எழுதியிருக்கிறார். ஆர்தர் ஆவலான்தான்

வித்யா உபாஸனைக்கே ஒரு 'ஸ்டான்டர்ட்' - 'கோல்ட் ஸ்டான்டர்ட்' மாதிரி! காஞ்சி மஹாசுவாமிகளே ஆர்தர் ஆவலானுடைய கிரந்தங்களை மேற்கோள் காட்டிப் பேசியிருக்கிறார். அதேமாதிரி கார்டன் வுட்ராஃப் ஒரு வித்யா உபாஸகர். அவருடைய நூல் மிக உயர்ந்த வியாக்யானம்.

பல மகான்கள் அம்பிகையைப் பற்றி எழுதிய கிரந்தங்களைப் பார்த்தால், லலிதா சஹஸ்ரநாமத்தை அடிப்படையாகக் கொண்டுதான் அவை எழுந்திருக்கின்றன என்பதில் எந்தவிதமான சந்தேகமும் கிடையாது.

**ஒரு நாட்டைப் பரிபாலித்துக் காப்பவனே பேரரசன் என்று சொன்னால், இவ்வளவு பெரிய சிருஷ்டியிலுள்ள இவ்வளவு உயிர்களையும் காப்பாற்றக் கூடியவள் அவள்!**

அம்பாள் பேரில் நூறு சுலோகங்களைக் கொண்டது செளந்தர்யலஹரி. அதற்கு பாகம் பிரித்துப் பல விளக்கங்கள் சொல்லப்படுகின்றன. அதிலே ஆதிசங்கர பகவத் பாதர் செய்த சுலோகங்கள் சில என்றும் பரமேசுவரனே செய்த சுலோகங்கள் சில என்றும் உண்டு. வர்ணனையாக இருக்கக்கூடிய சுலோகங்கள் பகவத் பாதர் செய்தவை; முன்னாலே இருக்கிற மந்திர பூர்வமான பாகம் பரமேசுவரனே செய்து கொடுத்தது.

அதனால்தான் மஹாசுவாமி சொல்லுவார் : பின்னால் வரக்கூடிய வர்ணனையான சுலோகங்கள் ரொம்ப அழகாக இருக்கும். அதாவது அம்பாளுடைய கேசாதி - பாத (உச்சந்தலை முதல் பாதங்கள்வரை) வர்ணனை. இந்த வர்ணனையையெல்லாம் அனுபவிக்கும்போது மகாசுவாமி ஒன்று சொல்லுவார் :

ஆதி சங்கரர் பரமேசுவரனிடமிருந்து செளந்தர்ய லஹரி சுலோகங்களைப் பெற்று வருகையில், நந்திகேசுவரர் அவர் கையிலிருந்த சுவடிகளைப் பிடித்து இழுத்தாராம்... அப்படி இழுத்ததிலே பாதி சுலோகங்கள் நந்திகேசுவரரிடம் போய்விட்டன. தமது கையில் தங்கிய சுலோகங்களைப் பார்த்துவிட்டு ஆதிசங்கரர் 'அம்மா என்ன பண்ணுவேன்?' என்று அம்பிகையிடம் கேட்டாராம். உடனே சாக்ஷாத் அம்பிகை பிரத்யக்ஷமாகி, "கவலைப் படாதே! கிழிந்துபோன சுவடிகள் போகட்டும். நீயே அவற்றைத் திரும்ப எழுதிவிடு" என்று சொன்னாள். உடனே ஆதிசங்கரர் மீதமுள்ள சுலோகங்களை இயற்றினார் என்று சொல்வதுண்டு.

இந்தக் கதையை அடிப்படையாகக் கொண்டு மஹாசுவாமிகள், "நந்திகேசுவரர் இழுத்ததுதான் இழுத்தார்... பேசாமல், எல்லாச் சுவடிகளையும் ஆதிசங்கரர் கையிலிருந்து அவர் இழுத்திருக்கலாம். அவ்வாறு செய்திருந்தால் எல்லாச் சுலோகங்களையும் ஆதிசங்கரரே இயற்றும்படி ஆகியிருக்குமே - அது இன்னும் மிகவும் ரஸமாக இருந்திருக்குமே" என்று சொல்லுவார்!

அப்படி, அவ்வளவு அற்புதமான சுலோகங்கள் அந்த செளந்தர்யலஹரி சுலோகங்கள். ஆனால் ஆசார்யர் செய்து கொடுத்த அந்த செளந்தர்யலஹரி சுலோகங்களுக்குக்கூட ஸ்ரீ லலிதா சஹஸ்ர நாமம்தான் அடிப்படை!

ஆகவே, அம்பாளைப் பற்றிய எந்தச் சுலோகமாக இருந்தாலும் ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாமத்தின் அடிப்படையில் உள்ளன.

ஆரம்ப நாமங்கள் ஸ்வரூப விசேஷத்தை வர்ணிக்கின்றன என்பதைப் பார்த்தோம். ஸ்வரூப வர்ணனை ஏன் முதலில் வரவேண்டும்...?

*(தொடரும்)*

உலகிலேயே மிக அதிக அளவில் ஹார்லிக்ஸ் பருகும் நாடு எது தெரியுமா? இந்தியாதான். அடுத்த இடம் பிரிட்டன். மூன்றாமிடம் மலேசியாவுக்கு. இன்று உலகில் பதினைந்துக்கும் அதிகமான முக்கிய நாடுகளில் ஹார்லிக்ஸ் பருகப்படுகிறது.

இந்தியாவில் ஊட்டச்சத்துப் பான மார்க்கெட்டில் முதல் இடத்தைப் பிடித்திருப்பது ஹார்லிக்ஸ். இந்திய மத்தியதர மற்றும் உயர்மட்ட குடும்பங்கள் வசிக்கும் வீடுகளில் நுழைந்தால், அனேகமாக இரண்டில் ஒரு வீட்டின் சமையல் அறையில் ஹார்லிக்ஸைப் பார்க்க முடியும். அந்தக் குடும்பத்தில் குறைந்தபட்சம் ஒருவர் காலையிலோ அல்லது இரவிலோ அல்லது இரண்டு வேளைகளிலுமோ ஹார்லிக்ஸ் பருகுகிறார் என்கிறது ஒரு சர்வே.

1870களில், தாய்மார்கள் தங்கள் பச்சைக் குழந்தைகளுக்குக் கொடுப்பதற்காக எடுத்து வைக்கும் பால், சீக்கிரம் கெட்டுப்போனதால் திண்டாடினார்கள். கெட்டுப்போன பாலைக் குடிக்கும் குழந்தைகள் அடிக்கடி உடல்நலப் பாதிப்புக்குள்ளாயின. அந்தக் காலகட்டத்தில் குழந்தைகளுடைய பால் பிரச்னையைத் தீர்ப்பதற்காக அண்ணன், தம்பி இரண்டு பேர் கண்டுபிடித்த தீர்வுதான் ஹார்லிக்ஸ்.

அண்ணன் பெயர் ஜேம்ஸ் ஹார்லிக்ஸ். அவர் ஒரு பார்மசிஸ்ட். குழந்தைகளுக்கான உணவு தயாரிக்கும் கம்பெனியில் வேலை பார்த்து வந்தார். அவருடைய தம்பி வில்லியம் ஹார்லிக்ஸ். 1973-ல் ஜேம்ஸ் ஹார்லிக்ஸ், வில்லியம் ஹார்லிக்ஸ் இருவரும் சேர்ந்து, அமெரிக்காவின் சிகாகோ நகரில் ஜே அண்ட் டபுள்யூ ஹார்லிக்ஸ் என்ற நிறுவனத்தை ஆரம்பித்து பார்லி, கோதுமை மாவு, கொஞ்சம் பால் ஆகியவற்றைக் கொண்டு தயாரித்த ஊட்டச்சத்து மாவுக்கு 'ஹார்லிக்ஸ்' என்றே பெயர் சூட்டிவிட்டார்கள்.

எஸ். சந்திரமௌலி

பாலில் கலந்து பருகலாம்; இல்லாது போனால் வெறும் வெந்நீர் போதும் என்பதால் தாய்மார்கள் மத்தியில் வெகு சீக்கிரத்திலேயே ஹார்லிக்ஸ் மிகுந்த வரவேற்பினைப் பெற்றது. இரண்டே வருடங்களில் அபாரமான வளர்ச்சி கண்ட ஹார்லிக்ஸ், சிகாகோவிலிருந்து, வின்கான்சின் என்ற பகுதிக்கு இடம்பெயர்ந்து தொழிற்சாலையை விரிவுபடுத்தியது. இதற்கிடையில், தங்கள் தயாரிப்பினை 'குழந்தைகளுக்கான பால் கலந்த உலர்ந்த செயற்கை உணவு' என்று பதிவு செய்து காப்புரிமையும் பெற்றுவிட்டார்கள் ஹார்லிக்ஸ் சகோதரர்கள்.




1890-ல் ஜேம்ஸ் ஹார்லிக்ஸ், லண்டன் திரும்பினார். அமெரிக்காவில் தயாரித்த ஹார்லிக்ஸை, இங்கிலாந்தில் இறக்குமதி செய்து விற்பனை செய்ய ஓர் அலுவலகத்தைத் திறந்தார். சுமார் பதினைந்து ஆண்டுகள் கழித்து, இங்கிலாந்தில் ஒரு தொழிற்சாலையும் ஆரம்பிக்கப்பட்டது.

புதிய பகுதி

# குழந்தைகளின் குதூகலம்!

1909 - 10-ல் ஹார்லிக்ஸ் வரலாற்றில் ஒரு திருப்பம் நிகழ்ந்தது. ராபர்ட் பெர்ரி, ரோல்ட் அமண்ட்சன், ராபர்ட் ஃபால்கன் ஸ்காட் என்ற மூவர் குழு வட துருவத்துக்கும், பின் தென் துருவத்துக்கும் சாதனைப் பயணம் மேற்கொண்டனர். அவர்கள் தங்களுக்கு எளிதில் ஜீரணமாகும், சத்தான, கலபமாக நெடுந்தூரப் பயணத்தின்போது எடுத்துச் செல்ல சௌகரியமான பானம் ஹார்லிக்ஸ் என்று முடிவு செய்தார்கள்.




அவர்கள் ஹார்லிக்ஸை எடுத்துச் சென்றது உலகமெங்கும் தெரியவந்த போது, ஹார்லிக்ஸ் உலகமெங்கும் தெரிந்த பெயர் ஆனது.

முதல் உலகப் போரில் பல்வேறு நாடுகள் மீதும் குண்டுமழை பொழியப் பட்டாலும், ஹார்லிக்ஸ் காட்டில் மட்டும் அதிர்ஷ்ட மழை பொழிந்தது. பெரும்பாலான நாடுகள் போர் முனையில் இருக்கும் தங்கள் நாட்டு ராணுவ வீரர்களுக்கு ஹார்லிக்ஸ் சப்ளை செய்தன.

1921ஆம் ஆண்டு, ஹார்லிக்ஸ் சகோதரர்களில் ஒருவரான ஜேம்ஸ் மரணமடைய, வில்லியம் ஹார்லிக்ஸுக்கு அமெரிக்க மார்க்கெட் என்றும், இறந்த ஜேம்ஸின் பிள்ளைகளுக்கு அமெரிக்கா தவிர்த்த இதர உலக நாடுகளின் மார்க்கெட் என்றும் பாகம் பிரித்துக் கொண்டனர்.

அடுத்து, வளர்ந்த குழந்தைகளை வளைத்துப் போட முடிவு செய்து வியூகம் வகுத்தது ஹார்லிக்ஸ். இரவில் குழந்தைகள் தூங்குவதற்கு முன்பு கதை கேட்கும் பழக்கத்தை அதிகரிக்க, புதிய குழந்தைகள் கதைகளையும், அதே நேரத்தில் இரவு ஹார்லிக்ஸ் குடித்துவிட்டு, கதை கேட்டபடி தூங்கினால் நல்ல தூக்கம் வரும் என்று விளம்பரப்படுத்தியது. 1936ஆம் ஆண்டு, வில்லியம் ஹார்லிக்கம் மரணமடைந்தாலும்,



• விழாவில் நடனம்...

## மன உளைச்சலிலிருந்து விடுதலை!

ஐ.டி. கம்பெனிகளின் அதிகரிப்பால், சென்னை வேறொரு புது கலாசாரத்துக்கு மாறி வருவது ஒரு பக்கமென்றால், சதா கம்ப்யூட்டரையே கட்டிக் கொண்டு அழுவதால் உண்டாகும் மன உளைச்சல்கள் இன்னொரு பக்கம். திறமையாளர்களை இதிலிருந்து மீட்டெடுக்க மாருதி கார் கம்பெனியும் ICICI கார் லோன் மேளாவும் இணைந்து யோசித்ததன் விளைவே, அண்மையில் சென்னை நந்தம்பாக்கம் ட்ரேட் சென்டரில் நடைபெற்ற 'Swift 2 frame' என்கிற பிரமாண்ட இசை நிகழ்ச்சி. இதில் சென்னையைச் சேர்ந்த TCS, Sify, HCL உள்ளிட்ட பல ஐ.டி. கம்பெனிகளின் ஊழியர்கள் கலந்து கொண்டு ஆடல், பாடல், மிமிக்ரி என அசத்தினார்கள். 'கிரேவிட்டி எண்டர்டெய்ன்மென்ட்' என்னும் நிறுவனம் இதைச் சிறப்பாக நடத்திக் கொடுத்திருக்கிறது.

மூவாயிரம் பேர் கலந்துகொண்ட இந்நிகழ்ச்சியின் போட்டிகளில் முதல் பரிசு பெற்றவர்களுக்கு அயல்நாட்டுப் பயணத்துக்கான விமான டிக்கெட்டுகள் வழங்கப்பட்டன. பாடகர் கார்த்திக், ஸ்ரீலேகா பார்த்தசாரதி இருவரும் நடுவர்களாகக் கலந்துகொண்டு நிகழ்ச்சியை சிறப்பித்தனர். ஐ.டி. துறையில் பணிபுரிவோருக்கான பல நிகழ்ச்சிகளை அண்மைக் காலமாக நடத்திப் புகழ்பெற்று வரும் 'கிரேவிட்டி எண்டர்டெய்ன்மென்ட்' நிறுவனம் உலகத் தரத்துக்கு இணையாக நிகழ்ச்சிகளை நடத்தி வருவது குறிப்பிடத்தக்கது.

**- கண்ணம்மா**

## ஹார்லிக்ஸ் : தெரியாத சில தகவல்கள்

• இந்தியாவில் சராசரியாக ஆண்டொன்றுக்கு இரண்டு பில்லியன் கப் ஹார்லிக்ஸ் பருகப்படுகிறது.

• உலகம் முழுவதிலுமாக தினமும் 12 கோடி பேர் ஹார்லிக்ஸ் பருகுகிறார்கள்.

• உலக ஊட்டச்சத்துப் பானச் சந்தையில், ஹார்லிக்ஸ் விற்பனை ஆண்டுக்கு 22% அளவில் அதிகரித்துக் கொண்டு போகிறது.

• இந்தியாவில் மூளை வளர்ச்சிக்கு உகந்தது என்று விளம்பரப்படுத்தப்படும் ஹார்லிக்ஸ் பிரிட்டன், ஆஸ்திரேலியா, தென்னாப்பிரிக்கா போன்ற நாடுகளில் தூக்கம் அளிக்கும் பானமாகவே விற்பனை செய்யப்படுகிறது.

• ஹார்லிக்ஸில் பாலைவிட அதிக கால்ஷியமும் ஏ, பி1, பி2, பி6, பி12, சி, டி, ஈ உள்ளிட்ட பல வைட்டமின்களும் இருக்கின்றன.

ஹார்லிக்ஸ் மார்க்கெட் சூடு பிடித்து விட்டது.

ஹார்லிக்ஸ் இந்திய எல்லைக்குள் அடி எடுத்து வைத்த வருடம் *1960.* பஞ்சாபில் கட்டப்பட்ட தொழிற்சாலையில், எருமைப் பாலைப் பயன்படுத்தி ஹார்லிக்ஸ் உற்பத்தி செய்யப்பட்டது. *1975*-ல் ஆந்திரப் பிரதேசத்தில் இன்னும் ஒரு தொழிற்சாலை என்று ஹார்லிக்ஸ் சாம்ராஜ்யம் விரிவடைந்து கொண்டே போனது. இன்னொரு பக்கம், ஹார்லிக்ஸ் நிறுவனத்தை ஆஸ்திரேலியாவின் ஸ்மித் க்லைன் பீச்சம் நிறுவனம் வாங்கியது. இன்று 'கிளாக்ஸோ ஸ்மித்க்லைன்' என்று ஆகிவிட்டது.

சரி! அப்படி என்ன இருக்கிறது ஹார்லிக்ஸில்? ஹார்லிக்ஸ் தயாரிப்பாளர்கள், குழந்தைகளைக் கவர வேண்டும் என்பதற்காக அதில் அதீத இனிப்பூட்டும் வண்ணம் எந்தவிதமான இரசாயன இனிப்புகளையும் சேர்ப்ப

தில்லை. அதில் இருக்கும் இனிப்புச் சுவைக்குக் காரணம், கோதுமை, பார்லி, பால் ஆகியவற்றிலுள்ள மால்டோஸ், லாக்டோஸ் போன்ற சர்க்கரைகளே.

இந்தியாவில் ஹார்லிக்ஸ் தனக்கென ஒரு தனியிடம் பிடித்திருக்கிறது என்றால் அதற்குக் காரணம் மாறிவரும் வாடிக்கையாளர் ரசனைக்கு ஏற்ப, ஹார்லிக்ஸில் பல்வேறு புதுமைகளைத் தொடர்ந்து புகுத்திக் கொண்டு வருவதுதான். பெண்களை, குறிப்பாகக் கர்ப்பிணித் தாய்மார்களைக் குறிவைத்து 'தாய்மார்கள் ஹார்லிக்ஸ்', வாண்டுகளைக் குறி வைத்து ஜூனியர் ஹார்லிக்ஸ் என்று பிரத்யேகமான ஹார்லிக்ஸ் வகைகளை அறிமுகப்படுத்தியது வியாபார ரீதியில் பெரும் வரவேற்பைப் பெற்றது.




ஆரம்ப காலம் முதலே, ஹார்லிக்ஸ் கடைப்பிடித்து வரும் இன்னொரு வியாபார வியூகம், குறிப்பிட்ட வாடிக்கையாளர்களுக்கு குடித்துப் பார்க்க 'சாம்பிள்' கொடுப்பது! இந்த உத்தி ஜூனியர் ஹார்லிக்ஸ் அறிமுகப்படுத்தப்பட்டபோது, மிகவும் நன்றாகப் பலனளித்தது. நாடு முழுவதும் உள்ள பல்வேறு பள்ளிகளுக்குச் சென்று சுமார் ஐம்பது லட்சம் கப் ஜூனியர் ஹார்லிக்ஸ் விநியோகிக்கப்பட்டது. குடித்துப் பார்த்த குட்டீசுக்கு ஜூனியர் ஹார்லிக்ஸ் ரொம்பப் பிடித்துப் போக, விற்பனை அதிகரித்தது.

# ப்ரிஸ்க்ரிப்ஷன்

எனக்குப் பல நாட்களாக முடி கொட்டிக்கொண்டே இருக்கிறது. தலைக்கு ஷாம்பு, சோப்பு உபயோகிப்பது, தலையில் எண்ணெய் தடவாதது மற்றும் ஹெல்மெட் அணிவதுதான் இதற்குக் காரணம் என்கிறார்கள். பல வைத்தியங்களைச் செய்தும் பலன் இல்லை. இதற்கு அக்கு பஞ்சரில் ஏதாவது தீர்வு உண்டா, டாக்டர்?

- எஸ். ராகவன்,
சென்னை - 40

டாக்டர் முத்துக்குமார்:
(அக்குபஞ்சர் நிபுணர்)

நம் உடலின் உச்சி முதல் பாதம் வரை ஒரே உடற்கூறு. இதில் பதினான்கு ஓடுபாதைகள் உள்ளன. இந்த ஓடுபாதைகளில் உயிர்ச்சத்து சரியாகச் சென்றால், நம் உடலுக்கு எந்தத் தீங்கும் வராது. அப்படி ஓடுபாதையில் உயிர்ச்சத்து சரியாகச் செல்லாமல் அடைப்பு ஏற்பட்டு விடுவதுதான் நோய்கள் தோன்றுவதற்கான அடிப்படைக் காரணம்.

உடம்பிலுள்ள முடிகளுக்கும், தலையிலுள்ள முடிகளுக்கும் வேறுபாடு உண்டு. உடம்பிலுள்ளவற்றை 'நுரையீரல் ஓடுபாதை' கட்டுப்படுத்த, தலையிலுள்ளவற்றை 'கிட்னி ஓடுபாதை' கட்டுப்படுத்துகிறது. கிட்னியின் ஓடுபாதையில் பாதிப்பு இருந்தால் கண்டிப்பாக முடி கொட்டும்.

முடி கொட்டுவதற்கு அக்குபஞ்சரில் தீர்வு உண்டு. முடி கொட்டிய இடத்தில் முடிக்கால் எனப்படும் துவாரம் மூடப்பட்டுவிடும். அக்குபஞ்சரில் இந்தத் துவாரத்தை 30 சின்ன சின்ன ஊசிகளைக் கொண்டு தட்டுவதன் மூலம் திறப்போம். மேலும் முடிக்கால்களின் வேர்களைப் பலப்படுத்துவதன் மூலமாக 60 நாட்களுக்குள் முடி தானாக வளர ஆரம்பித்து விடும்.



• டாக்டர் முத்துக்குமார்



• டாக்டர் செந்தில்



• டாக்டர் அருள்மொழிவர்மன்

அண்மையில் எனக்கு ஏற்பட்ட விபத்தில் என் முன் பற்கள் அனைத்தும் நொறுங்கிப்போய், முகமே விகாரமாக மாறிவிட்டது. எனக்கு இன்னும் திருமணம் கூட ஆகவில்லை. என் முகத்தை, பழையபடி மாற்ற நவீன சிகிச்சை ஏதேனும் உண்டா?

- ஆர். ராமன்,
கோவை

டாக்டர் செந்தில்:
(முகச்சீரமைப்பு நிபுணர்)

பற்கள் விழுந்து விட்டாலோ, பற்கள் நொறுங்கி விட்டாலோ அல்லது கோணலாக இருந்தாலோ சரி செய்ய தற்போது பல நவீன சிகிச்சை முறைகள் வந்து விட்டன. Dental Implants எனப்படும் பல் பதிப்பு முறை உங்களுக்கு உகந்ததாக இருக்கும். இம் முறையில் டைட்டானியம் என்கிற திகோனியை பல் இல்லாத இடத்தில் சர்ஜரி செய்துவைத்து, அதன் மேற்புறத்தில் செயற்கைப் பற்களைப் பொருத்தி விடலாம். இதன்மூலம் இயற்கையான செயல்திறனும் தோற்றப் பொலிவும் கிடைக்கும். ஆனால் 'செட்' ஆவதற்கு ஆறு மாத காலம் ஆகும். மிக விரைவாக வைத்தியம் தேவை என்றால், அதற்கும் வழி இருக்கிறது. (Immediate Loading Implants) விரைவாகப் பல் பதிக்கும் முறையில் சிகிச்சை செய்து

கொண்டால் முன்பிருந்த முகத்தைவிட சீரான முகத்தைக் கண்ணாடியில் மிகக் குறுகிய காலத்திலேயே பார்ப்பீர்கள்.

கரிக்காமல் காக்க இரண்டு சிகிச்சை முறைகள் உள்ளன. ஒன்று கண் சொட்டு மருந்து (Eye drops) போடுவது; இன்னொன்று சர்ஜரி செய்துகொள்வது. கண் மருந்தைப் பயன்படுத்துவோர் வாழ்நாள் முழுவதும் அதனைத் தொடர வேண்டியதை விட SLT என்கிற லேசர் சிகிச்சை முறையைச் செய்து கொள்வதால் வாழ்நாள் முழுவதும் சொட்டு மருந்து போடாமல் பாதுகாத்துக் கொள்ள முடியும்.

படங்கள்: **சுந்தரம்**



# முடி கொட்டுதலுக்கு முடிவுரை!



**நா**ற்பது வயதாகும் எனக்குக் கண் மங்கிக்கொண்டே வருவது போல தெரிகிறது. டூவீலரில் செல்லும்போது பக்கவாட்டில் வரும் வாகனங்கள் தெரிவதில்லை. கண்ணாடிக் கடையில் பரிசோதனை செய்யப்பட்ட Reading glass - ஐப் பயன்படுத்தியும் அப்படித் தான் இருக்கிறது. இதற்கு என்ன தான் தீர்வு?

- சோமசுந்தரம், மதுரை - 2

**டாக்டர் அருள்மொழிவர்மன்:**
**( கண் மருத்துவ நிபுணர்)**

உங்களுக்கு ஏற்பட்டுள்ள பிரச்னை அநேகமாக 'க்ளுக்கோமா' எனப்படும் கண்நீர் அழுத்த நோயாகத்தான் இருக்கும். இது பெரும்பாலும் நாற்பது வயதைக் கடந்தவர்களைத்தான் பாதிக்கிறது. சிறு குழந்தைகளுக்கும்கூட வரலாம். யாருக்கு, எதனால் வருகிறது என்று உறுதியாகச் சொல்லிவிட முடியாது. இது பரம்பரைத் தன்மை கொண்டது.

கண் சிறப்பு மருத்துவரை அணுகி, கண்ணிலுள்ள நீரின் அழுத்தம், நரம்பு எனக் கண்ணை முழுவதுமாகப் பரிசோதித்து அதற்குத் தகுந்தாற்போல சிகிச்சை பெற்றுக் கண்ணிலுள்ள நீரின் அழுத்தத்தை அதிகரிக்காமல் கட்டுப்பாட்டுடனும் பாதுகாப்புடனும் வைத்துக்கொள்ள முடியும்.

இந்த வியாதி ஆரம்பக் கட்டத்திலேயே கண்டறியப்பட்டால், கண்ணின் நீர் அழுத்தம் அதி

# ஜனநாயகம்



"புதிய அரசியல் அமைப்பின்படி இந்தியர்கள் சர்வ ஜன வாக்குரிமை பெற்றிருக்கிறார்கள். இந்திய மக்கள் இத்தகைய ஜீவாதார உரிமை பெற்றது இந்திய சரித்திரத்திலேயே இதுதான் முதல் தடவை.

"வயது வந்த சகலருக்கும் வாக்குரிமை உண்டு என்பதற்கு, தோட்டி முதல் தொண்டமான் வரையில் எல்லோருக்கும் தேச நிர்வாகத்தில் பங்கு உண்டு என்பதே அர்த்தம்.

"அதாவது, யாதொரு தங்கு தடையுமின்றி உங்களுடைய சொந்த சர்க்காரை நீங்கள் அமைத்துக் கொள்ளலாம்; உங்களுடைய சொந்த மதத்தை நீங்கள் பின்பற்றலாம்; உங்களுடைய பண்பாட்டையும் பழக்க வழக்கங்களையும் அனுஷ்டிக்கலாம்; உங்களுடைய சொந்த பாஷையைப் பேசலாம்; உங்களுடைய சொந்த வாழ்க்கையையும் தொழிலையும் நடத்தலாம்.

"உண்மையான ஜனநாயகம் என்பது இதுதான். இதை விடுத்து கொள்ளை, கொலை போன்ற பலாத்காரமான குற்றங்களைச் செய்வது ஜனநாயகம் ஆகுமா?

"அத்தகைய காரியங்களைச் செய்வோர் ஜனநாயக வாதிகள் ஆக மாட்டார்கள். அவர்களால் நாட்டின் சுதந்திரத்துக்கு ஆபத்து நேரும். அத்தகையோருக்குச் சுதந்திரம் அளிப்பதால் சமூகத்துக்கு ஆபத்து நேரும்."

இவ்வாறு சர்தார் படேல் ஜனங்களின் சக்தியையும் பொறுப்புகளையும் கடமைகளையும் விவரித்தார். ஜனநாயக விரோதிகளின் விபரீதமான காரியங்களைக் கண்டித்தார்.



சுதந்திர இந்தியக் குடியரசுத் திட்டத்தின்படி ஜனங்கள் தங்கள் இஷ்டப்படி கட்சிகளை நிறுவிக் கொள்ளலாம்; தங்கள் விருப்பத்துக்கு இணங்க சர்க்காரைச் சிருஷ்டிக்கலாம்; மாற்றி அமைக்கலாம்; வீழ்த்தவும் வீழ்த்தலாம்!

அவ்வாறாக ஜனநாயகத்துக்கே ஜீவநாடியாக சர்வஜன வாக்குரிமை அளிக்கப்பட்டிருக்கும்போது பலாத்கார முறைகளிலோ, சூழ்ச்சி வேலைகளிலோ, நாச காரியங்களிலோ ஈடுபட்டுத் தேச நலன்களைக் குட்டிச் சுவராக்

குவது பெரும் குற்றம் அல்லவா?

அதிலும் ஜனநாயகத்தின் பெயரால் அத்தகைய குற்றத்தைச் செய்வது மகா கொடிய மோசடி அல்லவா?

இன்னொரு விஷயம்:-

இப்போது சாதாரணமாக என்ன நடந்து வருகிறது என்றால், புது மேயர் ஒருவர் பதவிக்கு வந்ததும் அவருக்கு டீ பார்ட்டிகளும் டின்னர் பார்ட்டிகளும் கொடுக்க ஆரம்பிப்பார்கள். இப்படி ஆறு மாத காலம் போய்விடும். பிறகு மேயர் பதவியிலிருந்து நீங்கப் போவதை உத்தேசித்துப் பிரிவுபசாரப் பார்ட்டிகள் கொடுக்கத் தொடங்குவார்கள். அதில் ஆறு மாத காலம் போய்விடும். வருஷ முடிவில் பார்க்கும்போது மேயர் பதவிக்கு வந்து சாதித்தது என்று சொல்லக் கூடியது ஒன்றுமிராது.

இந்த டீ பார்ட்டி - டின்னர் பார்ட்டி சுழலில் மேயர் செங்கல்வராயன் அகப்பட்டுக் கொள்ளாமலிருந்தால் நலமாயிருக்கும்.

டீ பார்ட்டிக்கோ அல்லது டின்னர் பார்ட்டிக்கோ அழைக்க வருகிறவர்களிடம் மேயர் செங்கல்வராயன் ஒரு நிபந்தனை விதிக்கலாம். "பக்கத்து ஜில்லாக்களில் பஞ்ச நிவாரண வேலைக்காக நூறு ரூபாய் நன்கொடை அளித்தால் வருவேன்" என்று சொல்லலாம்.

மேஜைகளில் அலங்காரமாக உணவுப் பண்டங்களை வைத்துவிட்டுத் திரும்ப எடுத்துக் கொண்டு போய் எறிவதற்காக ஆயிரம் ரூபாய் செலவு செய்ய முன் வருகிறவர்கள் பஞ்சத்தில் அடிபட்ட ஏழைகளுக்குக் கஞ்சி ஊற்றிக் காப்பாற்ற நூறு ரூபாய் கொடுக்க மறுக்க மாட்டார்கள் அல்லவா!

## தழைக்க...





படம் : பொன்னாச்சி சுந்தரம்

# "கடைசிவரை காங்கிரஸ்தான்"

‘தலைமறைவு வாழ்க்கை வாழ்ந்த வனவாசம் காலத்தை தற்போது நினைக்கும்போது எப்படியிருக்கிறது?’ என்று ஃப்ளாஷ்பேக்கைக் கிளறினோம் கராத்தே தியாகராஜனிடம்...

"அது போராட்ட காலம். ஒரு மிகப் பெரிய ஆதிக்கச் சக்தியை எதிர்த்துக் களம் கண்ட ஒருவித போராட்டம்னுதான் சொல்லணும். போலீஸ்காரர்களைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக்கொண்டு அப்பா, அம்மாவோட சாவுக்குக்கூட நான் போக முடியாமல் செய்தார்கள். என்னைத் தேட அனுப்பிய போலீஸ்காரர்களை எம்.ஜி.ஆர். நகருக்கு அனுப்பியிருந்தால் 42 உயிர்களையாவது காப்பாற்றியிருக்கலாம்" என்று வனவாச அனுபவத்தை சோகத்துடன் நினைவு கூர்ந்தார்.

‘காங்கிரஸ் கட்சியில் நிறைய கோஷ்டிகள், நிறைய பூசல்கள் எப்படி...?’ என்றால் டென்ஷன் ஆகிறார் கராத்தே. "எந்தக் கட்சியில தான் கோஷ்டிகள் இல்லை. மற்ற கட்சிகளின் தலைமை இங்கேயே இருப்பதால் மாவட்ட வாரியாக கோஷ்டிகள் உருவாகின்றன. காங்கிரஸுக்கு டெல்லியில் தலைமையிடம் இருப்பதால் மாநில அளவில் பிரிந்து செயல்படுகிறார்கள். ஆனால் அனைவருமே காங்கிரஸை மேன்மைப்படுத்தத்தான் செயல்படுகிறார்கள்" என்றவரிடம் ‘அ.தி.மு.க. ஆட்சியில் உங்கள் மேல் சுமத்திய வழக்கு எந்த நிலைமையில் இருக்கிறது?’ என்றால், "ஒரு வழக்குகூட என்மீது இல்லை. ஒரு எஃப்.ஐ.ஆர்.கூட எந்த போலீஸும் என் மீது சொல்ல முடியாது" என்கிறார் காட்டமாக!

‘திரும்பவும் அம்மா அன்போடு அ.தி.மு.க.வுக்கு அழைத்தால் செல்வீர்களா’ என்றால், சட்டென மறுத்து "வாழ்க்கையில மரியாதை, தன்மானம் ரொம்ப முக்கியம். கடைசிவரை இந்தக் கட்சியில்தான் இருப்பேன். காங்கிரஸ்தான் என் உயிர்மூச்சு!" என்கிறார்.

- ம.மனோ சௌந்தர்


தீபாவளி வாழ்த்துக்கள்
ஆர வாரமாய் தீபாவளி
ஆடை வண்ணமாய்
சாரதா'ஸ்
DSS- 602
BKL- 402
சாரதா'ஸ்
சுப முகூர்த்த பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்
45,என்.எஸ்.பி. ரோடு, திருச்சி-2. போன்:2702077.
தன்பில்டிங், 827,மவுண்ட்ரோடு, சென்னை-2, போன்:28521177.

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka.